ஓம் பரப்பிரம்மணே நம: **80-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆனந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) 

| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ வைகாசி௴ 1௳ | இதழ்-62. |
| --- | --- | --- |
| Vol. 6. | 1931-ம் ௵ மே௴ 14௳ | No. 62. |




கற்புறு சிந்தை மாதர் கணவனை அன்றி மற்றோர்
இற்புறத்தவரை நாடார்; யாங்களும் இன்ப வாழ்வும்
தற்பரமாக நல்கும் தலைவ! நின்னலதோர் தேய்வம்
போற்புறக் கருதோம் கண்டாய்! பூரணானந்த வாழ்வே!

(கற்பினிற் சிறந்த காரிகையர், தமது கணவனையன்றி வேறு எத்தகையவரையும் நாடாமைபோல, எங்கட்கு மெய்யின்பவாழ்வை அளித்தருளிய இறைவனே! உன்னையல்லாது வேறு எத்தெய்வத்தினிடமும் சரணாகதி அடையமாட்டோம்.)

" ஆனந்தாமிருத ஆச்ரிதரக்ஷக ஆத்மாநந்த மஹேசசிவா " என்று அக்ஷரமாலையில் பாடப்பட்டிருக்கிறது. பகவான் ஆனந்தமென்னும் அமிர்தத்தை யூட்டுகிறவராய், அடைக்கலம் புகுந்தவர்களை ஸகல ஸுக ஸாம்பிராஜ்ய ஸம்பத்துக்களுடன் ஆதரித்துக் காப்பாற்றுபவராய், ஆத்மாநந்தத்தைத் தருபவராய், அநாத பந்துவாய், பக்தர்களுக்குக் கருணாஸமுத்திரமாய், துக்கிகளுக்கு ஸுகோத்பன்னராய், நோயாளிகளுக்கு ஸஞ்சீவினியாய், அவரவர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுபவராய், சாந்தமூர்த்தியாய் விளங்குகின்றார். தெய்வபக்தி யில்லாவிடில் மனம் சுத்தமாகாது. மனதிலுள்ள அழுக்கைப் பகவத் தியானத்தால் நீக்கவேண்டும். ஞானத்தால்

பகவானைப் பூஜைசெய்வதே ஆநந்தமாகும். ஸந்தோஷமென்கிற புஷ்பஹாரத்தை ஞானத்திலிருத்தி ஆநந்திப்பதே மகோந்நத பூஜை யாகும். ஆத்ம ஞானத்தை யறிவதே முக்தி மார்க்கம். சுத்த ஹிருதயம் உள்ளவர்களுக்கே பகவத் ஸ்வரூபம் விளங்கும்.

⁂

“ஆசைக்கோ ரளவில்லை” ஆசை இன்று நேற்று உண்டான தல்ல. சரீரம் எடுக்கும்போதே அதுவும் கூட இருக்கிறது. அங்கம் வளர அதுவும் விருத்தியாகிறது. ஆசையுண்டானபோதே துன்ப மும் தொடர்ந்து வருகிறது. நான் பட்ட ஆசை நிறைவேறிற்று என்று கூறுபவர்களே சில காலத்திற்குள் விஷஸர்ப்பத்தால் தீண் டப்பட்டவர்களைப்போல் துக்கித்து அதிர்ப்தியுடன் தவிக்கிறார்கள். சிறுகச் சிறுக உண்டான ஆசை பெரியதாய் வளர்ந்து உத்தம வழியை அடியோடடைத்துத் தானும் ஸுகமடையாமல் மற்றவர் களுக்கும் ஸமாதானத்தைக் கொடாமல் கெடுக்கும்தன்மை யுடை யது. ஆசை காரணமாக உலகில் நடக்கும் அக்கிரமங்கள் சொல்ல வசமோ? ஆசையின் வலைப்பட்டு அறிவை யிழந்தவர் எண்ணிலர். அக்கிரமிகளுக்கு என்றேனும் ஒருபொழுதில் சிக்ஷை நிச்சயமே.

தெய்வச்சிதம்பர தேவாவுன்சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பன மாமன்னர்வாழ்வும் புவியுமெங்கே?
மெய்வைத்த செல்வமெங்கே? மண்டலீகர்தம் மேடையெங்கே?
கைவைத்த நாடகசாலை யெங்கே?—யிது கண்மயக்கே!

⁂

“எழுதின விதி அழுதால் தீருமா?” ஊர்ஜித புத்தியில்லாதது பூர்வகர்ம பாபசேஷமென்று பெரியோர்கள் கூறுவர். எத்தனை முறை ஸத்புத்தி கூறினும் மனதை நல்வழியிலிருத்தாமல் அலைய விடும் அவிவேகிகளுக்கு உபதேசம் வியர்த்தமாகும். துவைதம், அத்வைத பேதங்களைப்பற்றி ஒரு பதிவிரதை தன் பதியைச் சொல்லும்படி வேண்டினாள். பதி கூறுகிறார்:—என் பிரியே! நீ வேறு, நான் வேறாக இருக்கிறோம். இது துவைதம்; உனக்கும் எனக்கும் சரீரஸம்பந்தமுண்டாய்ப் பிறக்கும் சிசு அத்வைதமாகி றது. இதை நீ பிரத்யக்ஷத்தில் பார்த்திருக்கிறாய். இதிலிருந்து அறிந்துகொள்ளலாமென்றார். மாயை மனிதர்களை விட்டகலும் வரை பற்பல எண்ணங்களும், பேதங்களும் உதித்துக்கொண்டே வரும். எத்தனை புஸ்தகங்களைப் படித்தாலும், பாடங்களைக் கற்று

---

ஊர்பேரில்லாத கடிதங்கள் எழுதிவிட்டு ஒரு குடும்பத்தைப் பிரித்து விட்டோம் என்று ஆநந்திப்பவர்கள், சில நாட்களுக்குப் பிறகு தாங்களும் தங்கள் குடும்பத்தைவிட்டுப் பிரிந்து அலங்கோலப்படும்படி நேர்ந்துவிடுகிறது.

லும், பிரஸங்கம் கேட்டாலும், உபதேசம் பெற்றாலும் மனம் ஸ்வாதீனமாகும்வரை பிரயோஜனப்படா. மேலும், மனோபலமே இகத்துக்கும் பரத்துக்கும் ஸாதகமானது. சரீரத்தால் அனுபவிப்பதைவிட, மனதால் அனுபவிக்கும் சக்தி மேலானது. இதை உதகரிக்க ஒரு சரிதமுண்டு.

ஃ

"துறவிக்கு வேந்தனோர் துரும்பு" என்பது பழமொழி. ஸர்வாதிகாரங்களும் கொண்ட வேந்தன், ஒரு அல்ப துரும்பாகத் துறவிக்குத் தோன்றுவது மனோபலத்தாலேயேயாகும். அநேக வருஷங்களுக்குமுன் பால்ய ஸந்யாஸியொருவர் ஸகல சாஸ்திரங்களையும் கற்றுப் பாண்டித்யம் பெற்று தேசஸஞ்சாரம் செய்துவந்தார். ஒரு தேசத்து மன்னன் ஸபையில் அவர் பரீக்ஷிக்கப்பட்டார். ஸகல சாஸ்திர பரீக்ஷைகளும் முடிந்தன. காம சாஸ்திரத்தில் அவர் மற்றவர்கள் கேட்ட கேள்விகளுக்கு அதிக ரஸமான பதில் சொல்லிவந்தார். அரசன் அவைகளைக்கேட்டு ஆச்சரியமடைந்து இவர் ஸந்யாஸியாயிற்றே; ஸ்திரீபோக விஷயம் நன்றாயறிந்திருக்கிறார்; அதை அனுபவத்தில் கண்டிராவிட்டால் இவ்வளவு தெளிவாய்ப் பதில் சொல்லமுடியுமாவென்று ஸந்தேகித்து, ஹே ஸந்யாஸீ! நீ காமசாஸ்திரத்தில் வல்லவனாயிருக்கிறாய்; உன் வேஷம் பொய்யென்று தெரிகிறது; ரதிஸௌக்யம் அனுபவித்திருக்கிற நீ வீண் வேஷம் போட்டு ஏன் திரிகிறாய்? உன்னைக் கழுவிலேற்றும்படி உத்தரவிட்டிருக்கிறேனென்றான். ஸந்யாஸி ராஜனைப் பார்த்து, ஆஹா! நான் கழுவிலேறச் சித்தமாயிருக்கிறேன்; எனக்கு மூன்று நாள் கெடுவு தரவேண்டும்; என் மனோபீஷ்டங்களை நீ நிறைவேற்றுவாயாகில் நான் சந்தோஷமடைவேன்; நாலாவது நாள் நீ என்னைக் கழுவிலேற்றலாமென்றார். அரசன் ஸம்மதித்தான். ஸந்யாஸி ஒரு செப்புச்சொம்பு முற்றிலும் பாசி பிடித்து அழுக்கடைந்ததாய்ப் பார்த்துக்கொண்டு வரச் சொன்னார். அரசன் அவ்விதமே அழுக்கடைந்த சொம்பு ஒன்றைக் கொண்டுவந்தான். அந்தச் சொம்பை மலம் நிறைந்த குழியில் புதைக்கச் செய்து தாம் தவத்திலிருந்தார். மூன்றாவது நாள் ஸந்யாஸி அழைக்கிறாரென்று அரசனுக்குச் சங்கதி வந்தது. ராஜன் அவரிடம் சென்று என்னவென்று வினவினான். அன்றைக்குப் புதைத்த பாத்திரத்தைக் கொண்டுவா என்றார். அரசன் மலக்குழியிலிருந்து எடுத்துவந்து கொடுத்தான். பழய சொம்பு அழுக்காயிருந்ததே; இதேது புதிய சொம்பைக் கொண்டுவந்திருக்கிறாய்; அழுக்குடைய சொம்பைக்

---

மேல்பகட்டைக்கண்டு ஒருவர்பேரில் நல்லெண்ணங்கொண்டு பேசப்போனால், அவர் நமது வீட்டின் சங்கதிகளை மெதுவாக நம்மூலமாக அறிந்துகொண்டுவிடப் பார்க்கிறார். நம் வீட்டில் கொள்ளைபோடவும், சுரண்டவும், பிரித்து மித்திரபேதம் செய்யவும் நம்மையே யோசனை கேட்கிறார்.

கொண்டுவா வென்றார். அரசன் அந்த சொம்புதான் இதுவென, ஸந்யாஸி அல்லவென்று ஸாதித்தார். இருவருக்கும் விவாத முண்டாயிற்று. சொம்பிலிருந்த அழுக்கு எவ்விதம் நீங்கிற்று; அதை விவரித்துச் சொல் என்றார். மலத்தின் புளிப்பால் சொம்பி லிருந்த களிம்பு நீங்கிப் பிரகாசமுண்டாயிற்றென்று அரசன் நவின் றான். அதை என்னமாய் அறிந்தாய்?—நீ மலம் சாப்பிட்டிருப் பாய் என்று எண்ணுகிறேன்; இல்லாவிடில் உனக்கு என்னமாய்த் தெரியுமென்று ஸந்யாஸி கேட்க, மலத்துக்குப் பாத்திரத்திலிருக் கும் அழுக்கை யெடுக்கும் சக்தி யிருக்கிறதென்று எல்லோரும் கூறுகிறார்கள்; நானும் அவ்விதமே அறிந்திருக்கிறேன்; தின்று பாராமலே ஸ்பஷ்டமாய்விளங்குகிறது என்றான். ஸந்யாஸி, அரசே! நீ எவ்விதம் மலத்தின் குணத்தைத் தின்னாமலே யறிந்தாயோ, காம சாஸ்திரமும் அவ்விதமே எனக்குத் தெரிந்திருக்குமென்று நினைக்கவேண்டுமல்லவா வென்றார். அரசன் ஸந்யாஸியின் அடி பணிந்து அபராதத்தை க்ஷமிக்கக் கோரிப் பூஜித்தான். மனோபலத் தின் பலன் எவ்விதமாயிருக்கிறதென்பதை இதனால் அறியலாம். துறவியின் மனோபலமே அவரது பிராணனைக் காத்தது.



"கஷ்டவழி வேண்டுமோ?—ஸுகமார்க்கம் தேவையா?" என்று மனம் கேட்கிறது. கஷ்டமென்பது இகலோக ஸம்சார இன்பத் தில் அகப்பட்டுத் தவிக்கிறதாகும். ஸுகமென்பது எல்லாவற்றை யும் ஒழித்து ஆநந்த நிலைமையை யடைய விரும்புவது. எத்தனை நாள் அனுபவித்தாலும் உலக ஸுகம் நிலைத்ததல்ல. மின்னலைப் போல் பிரகாஸத்தைக் காட்டித் தக்ஷணமே மறைந்து போகும். பூலோக ஸுகம் சாஸ்வதமல்ல. நல்லறிவில்லாததாலும், யௌவன மதத்தாலும், ஸுகதுக்கங்களின் தன்மையைப் பகுத்தறியாததா லும், மனிதர்கள் கடவுளை ஸ்தோத்திரம் செய்யும்போதெல்லாம்— பணத்தைக் கொடும், பெண்டுபிள்ளைகளைத் தந்தருளும் என்று வேண்டுவார்கள். அவர்கள் பிரிந்தால் எத்தனை துக்கம் வருகிற தென்பதை முன்னதாக யோசிக்கிற பக்குவமில்லை. நாமே ஒன்றுக் குப் பிரயத்தனப்பட்டு ஈசுவரனிடம் முறையிட்டுக்கொள்வதைவிட, வாராததை வருந்தி வேண்டாமலும், வந்ததை நீக்கிவிடாமலும் பொறுமையுடன் ஸாந்தமாய் நடந்துகொள்வதே விவேகமாகும்.



"வாக்தேவி, ஸ்ரீதேவி, மகாதேவி" ஆகிய மூன்று தேவிகளை வணங்காதவரிடம் மூதேவி செல்லுவாள். பெரியோரைப் பழிக் கும்படி துஷ்டபுத்தி சொல்லுவாள். பக்திஹீனர்களாகிய அவர்க ளின் ஹிருதயத்தைக் கைக்கொள்ளுவாள். பாம்பு புற்றை நாடி

யோடும். முதலை குளத்தைத் தேடிச் செல்லும். காடி புலிகள் காட்டுப் புதரிலும் குகையிலும் வாஸம் செய்யும். அதுபோல், மூன்று தேவிகளிடம் பக்தியில்லாதவர் எவரென்று தேடி மூதேவி வந்தடைவாள். ஆதலின், ஸகல ஸம்பத்துக்களும் மூன்று தேவிகளின் கிருபையை யடைந்தவர்கட்கே வித்திக்கும்.

ஃ

"உதர நிமித்தம் பகுகிருதவேஷம்" என்று பஜகோவிந்த ஸ்தோத்திரத்தில் சொல்லியிருக்கிறது. வேஷதாரிகளின் ஸகவாஸம் ஒருபோதும் கூடாது. ஏமாற்றுவதே அவர்களின் தொழில். அகப்பட்டதை அடித்துக்கொண்டுபோக வழிபார்ப்பார்கள். வயிற்றுப்பிழைப்புக்காகவும் சிலர் விவித வேஷம் போடுவார்கள். பிச்சைக்குப்போவோன் இல்லாத ஆடம்பர அலங்காரங்களைச் செய்துகொண்டு வெளியில் புறப்படுகிறான். ஸாக்ஷாத் கைலாஸாதிபதியோவென்று மயங்கும்படி ஒருமுறம் விபூதியைச் சரீரமுழுதும் பூசி, ருத்ராக்ஷ மாலைகளை யணிந்து, காலிலொரு பாதரக்ஷை போட்டு, பிறரைத் தகித்துவிடுவதுபோல் கடாக்ஷவீக்ஷண்யம் காட்டித் திரிகிறான். இவ்விதமே, ஸாக்ஷாத் இராமாநுஜர்போல் பலமான நாமங்கள் தரித்துக் கையிலொரு விசிறியுடன் மகா பாகவதோத்தமனாக வேஷம் போடுகிறான். இவர்களுடைய நடத்தை வெளியில் இவ்விதமிருக்கிறது. அவன் வீட்டிற்குச் சென்று நோக்கினோ மதுமாம்ஸப் பிரியனாய், உபநாயகிலோலனாய், காமியாய், தூர்த்தனாய்க் காணப்படுகின்றான். உண்மையாகவே சிவபக்தி, விஷ்ணு பக்தி செய்வோர்களை நாம் குறைகூறவில்லை. வேஷதாரிகளின் காரியத்தையே குறிப்பிட்டது. பகவத்பக்தி செய்யாமல் தமக்குப் பகவானிடம் விசேஷித்தபிரேமை இருப்பதாகத் தங்களை உயர்த்திச் சொல்லிக்கொள்வோர்களும் ஒருவித வேஷதாரிகளேயாவர். ஒருக்கால் நாமும் இவ்வித நடிப்பு வேஷதாரிகள்தானோ என்று நம்மையே ஸம்சயித்து ஒரு கேள்வி கேட்டுக்கொள்ளக்கடவோம்.

ஃ

"பொருடனைப் போற்றிவாழ்" உலகத்தில் தர்மம் அதர்மம் ஆகிய இரண்டையும் அறிந்து நடப்பவனே விவேகி யெனப்படுவான். முதலாவது தனது ஆத்மா கடைத்தேறுவதற்காகச் செய்யும் கர்மங்களே தர்மமென்போம். அதர்மமென்பது அக்கர்மங்களைச் செய்யாமல் தவிர்ப்பதாம். புருஷன் தன்னைக் காப்பாற்றிக்கொள்வது முதல் தர்மமாயும், பிறகு வேண்டிய செல்வமிருந்தால் தன் பந்துக்களைக் காப்பாற்றுவது இரண்டாவது தர்மமாகவும் கொள்ளவேண்டும். மனிதர்களிடம் அன்புகொண்டு பின் ஏமாறி மனம் ஸங்கடமடைவதிலும், ஸகல அபிமானங்களையும் பகவான்

பேரில் வைப்பது எத்தனை பிரயோஜனம்? இகத்துக்கும் ஸுக முண்டு; பரத்துக்கும் ஸுகமுண்டன்றோ?

ஃ

"அஞ்ஞானத்தை அகற்றினால் ஆநந்தமுண்டாகும்" சிறு குழந்தைகள் ரப்பரினால் செய்த பாம்பைக்கண்டும், புலித்தோல் போர்த்த மனிதனைக் கண்டும் பயப்படும். அதுபோல் அஞ்ஞானிகள் பிரமையால் பலவித துன்புங்களை யனுபவிக்கின்றனர். ஸ்வர்க்க—நரகங்களிருப்பது உண்மையா பொய்யாவெனின், ஸ்தூல சரீரமிருப்பது எப்படி உண்மையோ, அப்படியே ஸ்வர்க்க நரக—வியவகாரங்களும் உண்மையே. அநாத்மாவாகிய சரீரத்தை நாமென்று நினைக்கும்வரை ஸ்வர்க்க—நரகங்களுண்டு. சரீரம் அநித்யம்; ஆத்மா ஒன்றுதான் நித்யம் என்ற நிச்சய ஞானம் எந்த க்ஷணத்தில் ஏற்படுகிறதோ. அந்த க்ஷணத்திலேயே ஸகல பாபங்களிலிருந்தும் விலகுவதுடன் ஸ்வர்க்க நரகமும் மறைந்துபோகின்றன. ஆகவே, ஞானத்தால் இன்பமும், அஞ்ஞானத்தால் துன்பமும் உண்டாகின்றன.

ஃ

1. ஸர்வவல்லபனும் தயாரஸபூர்ணனுமாகிய அப்பனே! யாங்கள் நின் ஸன்மார்க்கத்தினின்றும் நீங்கி, எமது மனப்படி காமியார்த்தங்களையும் கைதவங்களையும் மேன்மேலும் பாராட்டித் தொடர்ந்து அலைந்தனம். நின் திருவுள்ளம் விரும்பாதனவற்றையே விரும்பி மகா அபராதிகளானோம். செய்யத் தகாதனவற்றைச் செய்தோம். செய்யத் தகுந்தவற்றைச் செய்யா தொழிந்தோம். எம்மிடத்து சுத்தமும் சுசீலமும் அற்றன. எவ்வாறிருக்கினும் நீ எங்களைக் கைநழுவவிடாது மிகவும் அபராதிகளாகிய அடியாரைக் கருணைகூர்ந்து மன்னித்துக் கடைத்தேற்றக் கடாக்ஷிப்பாய். எங்களின் குற்றங்களை ஒளிக்காமல் நின் ஸந்நிதானத்தில் வெளியிட்டு நின் பாதாரவிந்தங்களில் அடைக்கலம் புகுந்தோமாதலால் எங்களை உபேக்ஷை செய்யாது ரக்ஷிப்பாய். பதிதர்களாய் வருந்துகின்ற எங்களைப் பரிசுத்தராக்கி, யாங்கள் பாபசிந்தைகள் மறந்து பாரமார்த்திகத்தை நாடிப்பற்றும்படி ஞானவொளி கொடுத்தருள்வாய்.

2. பரமபுருஷனாகிய எமதய்யனே! ஸர்வவல்லமையும், நித்தியத்துவமும் உடைய பரந்தாமனே! நீ இதுவரையில் பக்கத்துத் துணையாகி எங்களை இரக்ஷித்ததுபோலவே இனியும் கூட இருந்து திருத்தி அபாயமின்றிக் காத்து இரக்ஷித்தருள்வாயாக.

3. ஓ கர்த்தனே! நின் திருநாமம் வாழிய. நின் திருகடாக்ஷ வீக்ஷண்ணியமும் எமையாள்வதாக. நின் திருநாமப் பிரபாவம் எங்கும் பரவி என்றும் வாழிய. நின்னருள் எம்மைப் பழிபாவங்கள் அண்டாமல் தடுத்துக் காத்தருள்வதாக. நின் பரமபதமும் வாழ்வதாக. ஓம் தத்ஸத்.






# ஒருவரையொருவர் அறிந்து கொள்ளுதல்.



வனுடன் இருவரும் சந்தித்து ஒருவரை யொருவர் பிரீதிக்கின்றனர்; பரஸ்பரம் கண்டு கொண்டதற்கு மகிழ்கின்றனர்; எவ்வளவோ அன்புப் பேச்சுகள் நடக்கின்றன; கனத்த உபசாரங்களும், விருந்து வைபவங்களும் நிகழ்கின்றன; ஒருவரை யொருவர் நம்பிவிடவும் எண்ணுகின்றார்கள்; தனித்துத் தவிக்கும் உலகினிடை தமக்கு ஒரு நல்ல துணையேற்பட்டதெனவும் கருதுகின்றனர்; எவ்வளவோ கடிதப் போக்குவரத்துகளும் பெருகுகின்றன; இவ்வளவும் சரிதான்; சந்தோஷம்தான்; ஆனால், ஒருவரை யொருவர்—ஒருவரின் உள்ளத்தை மற்றொருவர்—நன்கு அறிந்து கொண்டனரா என்பது வினா? ஃ

நீராழம் கண்டாலும் காணலாம்; நெஞ்சாழம் காணமுடியுமா? கடத்தற்கரிய ஸமுத்திரத்தின் ஆழத்தைக் கண்டுகொண்டாலும் நெஞ்சின் ஆழத்தைக் காண்பதென்பது கூடுமானதாயில்லை. வெளித்தோற்றத்தையே உலகம் பெரும்பான்மையும் நம்பிக்கொள்கின்றது. நாம் எவர் மீது அத்யந்த பிரீதியுடையவராயிருக்கின்றோமோ, அவர் நாம் நினைக்கும் விதமாக நம்மைப் பிரீதிக்கவில்லை யென்பதை நாம் அறிய முடிகிறதா? அநேக வருஷங்கள் வரையிலும் நாம் தெரிந்து கொள்ளமுடியாமலே போய்விடுகிறோம். நாம் பிரீதிப்பதாக நினைப்பவர்கள் பிரீதிப்பது போல் பாவனை செய்கிறார்கள். மனஸ்தாபம் வரக்கூடாதென்பதற்காக நம்மை உபசரிப்பதாயிருக்கிறார்கள். இவ்விதம் உபசரித்துவிட்டு, இதென்ன வீண்செலவு, தெண்டத்திற்கு ஆக்கிக்கொட்ட வேண்டியிருக்கிறதே என்று உள்ளுக்கு நினைத்துக் கொள்ளுகிறார்கள். சமையற் கட்டில் "அதற்குள் அவ்வளவு நெய்யும் ஆகிவிட்டதா" என்று எவ்வளவோ எரி

---

தனது வீட்டுப் பெண்கள் சரியாயிருந்தால் தனது குடும்ப கௌரவம் வெளியிற் போகவும், பிறர் தனக்குப் புத்தி சொல்லவும் நேருமா?

ச்சலான பேச்சுகளைக் கொட்டி விட்டு, வெளியில் உட்கார்ந்துள்ள பிரீதித்தவர்களிடம் வரும்போதோ மிக்க அன்போடும் புன்னகை தவிழ்ந்த முகத்தோடும் நின்று வெகு பிரியமாகப் பேசுகிறார்கள். இந்தப் பிரீதிப்பேச்சுகளை வெளியில் உட்கார்ந்திருப்பவர் உண்மை யென்றே நம்பிவிடுகிறார்கள். ஒருவனை வருமாறு பலமுறை கடிதம் எழுதுகிறார்கள். அவனோ ஆ! அவர்களுக்கு நம் மீது எவ்வளவு அன்பு, எத்தனை தடவை வருமாறு கடிதங்கள்! சரி, புறப்படுவோமென்று தன்னைப் பிரீதித்தவர்கள் இருக்கும் ஊர் போய்ச் சேருகிறான். அவன் வாயிற்படிக்குள் நுழையும்போதே வீட்டுக்குள்ளிருப்பவர் கண்டு கொண்டு, "வந்து விட்டானோ, தொல்லை, இனி தெண்டச் செலவுகள்தான்" என்று முகம் சுளித்துக்கொள்கின்றார்! அடுத்த நிமிஷத்தில் அவரை ஊரிலிருந்து வந்தவன் அன்பு பொங்கிய யதார்த்த உள்ளத்துடன் கண்டுகொள்கின்றான். அவரோ அவனிலும் மேன்பட்ட அன்பைக் காண்பித்தபடி கனத்த உபசாரத்துடன் க்ஷேமங்கள் விசாரிக்கிறார். இவ்விதம் உணர்த்தும் பிரீதி உண்மையேதானா? அவருடைய மனத்தை ஊரிலிருந்து வந்த பேதமை உள்ளத்தினன் அறிய முடிகின்றதா?

ஃ

மிக்க சீமானென்றும், கௌரவமான எண்ணங்களுள்ளவனென்றும், சத்தியவந்தனென்றும் ஒருவனை ஒரு நங்கை உயர்வான எண்ணங்கள் கொண்டு வளர்க்கின்றாள்; அவனைப் பிரீதிக்கின்றாள்; காதலும் கொள்கின்றாள்; அவனையே நம்பிவிடுகின்றாள். அவனோ பெருங்கள்ளனாகவும், கொலைஞனாகவும், அநேக குற்றங்கள் புரிந்தவனாகவும், இப்பெண்ணுக்கு அவள் அறியாததும், தான் அறிந்திருப்பதுவும், இனி அவளுக்குக் கிடைக்கப் போவதுமான பெரிய ஆஸ்திகளுக்கு இச்சித்தே அவளை மணப்பதற்கு முயல்பவனாகவும் இருக்கின்றான். இவனது கபட நாட்டியத்தை அந்தப் பெண் முன்னதாக ஊகித்துக்கொள்ள சாத்தியப்படுகின்றதா?

ஃ

நட்பு விஷயத்திலும் ஒருவரை யொருவர் எவ்வளவோ நம்புகிறார்கள். எவனைத் தனது உண்மையான நண்பனென்று ஒருவன் நினைக்கிறானோ, அந்த விதமாக அவன் இருக்கவில்லை யென்பதை வெகு காலம் வரையில் அறியாமலே போய்விடுகிறான். இவன் பிரீதி வைத்தது உண்மை; ஆனால், அவன் இவனிடத்துப் பிரீதி

---

எல்லா பாக்கியமும் மக்களும் நற்கணவனும் கூடியிருந்தும் சில பெண்களுக்கு அநுபவிக்க அதிர்ஷ்டமில்லாமல் எல்லோரையும் பகைத்துக்கொண்டு தாங்களும் கண்ணீர்விடுகிறார்கள். சிலர் பச்சைப்பல்லாக்கு ஏறிவிடுகிறார்கள்.

கொண்டதென்பது வெறும் நடிப்பாகவே போகின்றது. அல்லது, காரியார்த்தமான நட்பாகவும் மாறுகின்றது. ராமன் பெரிய நிலையிலிருக்கிறான். கிருஷ்ணனோ மிக்க ஏழை; கிருஷ்ணன் ராமனுடைய கருணையை எதிர்நோக்குகின்றான். ராமனும் ஓரிடத்தில் கிருஷ்ணனை ஒரு பொறுப்புள்ள வேலையைச் செய்யும்படி ஒரு கனவானிடம் அனுப்புகிறான். கிருஷ்ணனும் மனஸ்பூர்வமாய் வேலைசெய்கிறான் முடிவில் கனவான் கிருஷ்ணனுக்குப் பரிசளிக்க நினைத்து, "உமது நண்பனுக்கு எத்தகைய வெகுமதியைச் செய்தனுப்புகிறது?" என்று ராமனை டெலிபோனில் கேட்கிறார். ராமனோ அதற்குப் பதிலாக, "அவனுக்கு ஒரு பத்து ரூபாய் கொடுத்தால் போதும், அவனது தரித்திர நிலைக்கு அது நூறு ரூபாய்க்கு சமானம்" என்று தெரிவித்து விடுகிறான். கனவான் அவ்விதமே பத்து ரூபாய் கொடுக்க வர, கிருஷ்ணன் மனம்நொந்தவனுப் மறுத்துவிட, பிறகு சமாதானம் செய்து இருபது ரூபாய் கொடுத்து அனுப்புகிறார். கிருஷ்ணன் அதிருப்தியுடன் வெளியேறி ராமனிடம் சென்று நடந்ததைக் கூறி வியஸனிக்கின்றான். இராமனோ ஏதும் அறியாதவன் போல் செவி சாய்த்து "அப்படியா, சங்கதி, இருக்கட்டும்" என்று கனவானைக் கோபித்துக் கொண்டதுபோல் நடிக்கின்றான். இந்தக் கபட நடிப்பைக் கிருஷ்ணன் அறியப்போவது எந்த நாளிலோ?

ஃ

தன் பெண்ணைக் கேட்டவர்கள் தகுந்த அந்தஸ்திலுள்ளவர்கள் தானா என்பதை அறியவிரும்பி ஒருவர் நேரில் அந்த வீட்டிற்கு வருகிறார். அவ்வீட்டினரோ தங்களின் கௌரவத்திற் கேற்றபடி அவருக்கு உண்மையாகவே அதிக உபசாரங்கள் செய்து விருந்து மரியாதைகள் நடத்துகிறார்கள். இவ்வளவும் மனஸ்பூர்வமாகவே செய்ததாயிருக்க, வந்தவரோ அந்த உபசாரங்களைத் தம்மை ஏமாற்றி மயக்கிப் பெண்ணைப் பறிப்பதற்காகச் செய்ததென்று எண்ணிக்கொண்டவராய்ச் சரிவரப் புசியாமலே பாதி பாதியாய் இலையில் வைத்துவிட்டு எழுந்து விடுகிறார். பிறகு வீட்டாருக்குச் சொல்லாமலே போய்விடுகிறார். வீட்டினரும் அவரது செயல்களைக் கண்டு அதிசயிக்கின்றனர். நல்ல இடத்தைக் கபடமான இடமென்று நினைத்த இவர், கடைசியில் முழுமோசமான இடத்தை உண்மையான இடமென்று நம்பி, அங்கு தமது பெண்ணைக் கொடுத்துவிட்டு, அப்பால் தாம் ஏமாறியதற்குப் பிரலாபிக்கிறார். ஒருவர் மனத்தை யொருவர் அறிதலென்பது சுலப சாத்தியமாயில்லை.

---

அவனுக்கு நீ பெண்கொடுத்ததால் அவன் உன்னை மாமி, மாமனுர் என்று பிரியம் காண்பிக்கிறான். மற்றவரும் அப்படிப் பிரியங் காட்ட முடியுமோ? பிரியம் காட்டவில்லையே என்றால் நீ மற்றவர்களுக்கு என்ன செய்து விட்டாய்?

கடைசி வரையிலும் அறிய முடியாமலே போய் விடுகின்றது. அல்லது இடையில் அறிந்து திகைக்க நேர்கின்றது.

ஃ

என்றுமே வராத ஒருவர் தமது குடும்ப சகிதமாய்த் தமது பந்துவின் வீட்டிற்கு வருகிறார். பந்துவோ மிக்க அன்புடன் இவர்களை வரவேற்றுஉபசரிக்கின்றார். ஒரு வாரம் ஆகின்றது; பந்துவுக்கு ஏராளமான செலவு. விருந்தினரும் வீட்டை விட்டு அசைவதாகத் தோற்றவில்லை. சம்பிரமமாக உண்டுவிட்டு சுகமாகத் தூங்குகிறார்கள். இரண்டு வாரங்கள் செல்லுகின்றன. அப்பொழுதும் புறப்படும் குறி யொன்றும் காணோம். சில ஏமாறியவர்களைப்போல தாங்கள் வந்த—புறப்படுகிற—சங்கதிகளைச் சொல்பவராகவுமில்லை. இதனால் மனம் சலித்த பந்து எதிர் வீட்டுக்காரரான தன் உறவினரிடம் சென்று—“அவர்கள் எப்போது போவார்களோ தெரியவில்லை, எதற்காக வந்தார்களென்பதும் விளங்கவில்லை, செலவுகளோ அபாரம்”—என்று முறையிடுகிறார். அந்த உறவினர் இந்தப் பந்துவை அவமானபடுத்த இதுவே தக்க சமயமென்று நினைத்து, ஊரிலிருந்து வந்துள்ளவர்களிடம் அந்தப் பந்து கூறியவற்றைத் தெரிவித்துத் தன் வீட்டிற்கு வந்திருங்கள், அந்தப் பந்து எப்பொழுதும் அல்ப புத்திக்காரன் என்று இகழுகின்றார். ஊரிலிருந்து வந்தவர்களும் அந்த உறவினர் பக்கம் சேர்ந்து கொண்டு, தம்மை இத்தனைநாள் உபசரித்த பந்துவை இகழ்ந்துவிட்டு அவ்வுறவினரின் வீட்டிற்குப் போய்விடுகிறார்கள். அந்த உறவினரும் போட்டிக்காகப் பாயசவிருந்துகள் நடத்தித் தம்மைப் பெருமைப்படுத்திக் கொள்கிறார். ஊரிலிருந்து வந்தவர்களும் இவ்விதம் போட்டி போட்டுக் கொண்டு உபசரிப்பவர்கள் இன்னும் இரண்டொருவர் கிடைத்தால் நலமாயிருக்குமென்று உள்ளுக்குள் சிரித்துக் கொண்டு சுகமாகப் புசித்து ஸந்தோஷமா யிருக்கிறார்கள். உறவினரின் வீட்டிலும் ஒரு மாதம் ஆகிவிடுகின்றது. விருந்தினர் புறப்படுவதாகக் காணோம்! என் வலியச் சென்று அழைத்தோமென்று உறவினர் கையைப் பிசைகிறார். மேற்கொண்டும் ஒரு மாதம் வரை தங்கிவிட்டு, அப்பால் “தாங்கள் ஊருக்குப் போகவேண்டியிருக்கிறதென்றும், அதனால் அதிக (!) நாள் தங்கமுடியவில்லை” யென்றும் பிரயாணம் சொல்லிக் கொண்டு புறப்பட்டுச் செல்கிறார்கள். உறவினருக்கும் போதும் போதும் என்றாய்விடுகிறது. இவர்கள்

---

ஒரு கலகநாடகம் நடந்து தீர்ந்ததானால், அதிலிருந்து கண்ட அனுபவங்களும் படிப்பினைகளும் என்னென்னவென்று ஒரு காகிதத்தில் குறிப்பிட்டு “அமிர்த குணபோதினி” க்கு அனுப்பி உலகுக்கு அவற்றால் முன்னெச்சரிக்கை செய்வது ஒருவித உபகாரமாகும்.

இவ்விதம் மூன்று மாதகாலம்போல் இங்கு தங்கியதேன் என்ற விஷயம் வெளிவருவதேயில்லை. வந்தவர்களும் தங்களைப்பற்றியேனும், இத்தனை நாள் தாங்கள் தங்கப் போகிறோமென்பதைப் பற்றியேனும் வெளியிடாத அவ்வளவு சாமர்த்தியசாலிகளாகவும், பக்குவசாலிகளாவும், தந்திரக்கையினராகவும் இருக்கிறார்கள். கடைசியில், ஆறுமாதங்கட்குப் பிறகு அவர்களைப் பற்றிய விஷயங்கள் தெரிய வருகின்றன. அவர்களுடைய பூர்வ சொத்துக்கள் யாவும் போய், வீடும் நிலமும் விற்கப்பட்டு யாத்திரையாய் நெடுகப் புறப்பட்டுவிட்டன ரென்றும் அறியும்போது, அவர்கள் அனைத்தையும் மூடிவிட்டு, ஏதோ இரண்டொருநாள் தங்க வந்தது போல் நடித்ததை நினைத்து வியப்புற நேர்கின்றது. அந்தப் பந்துவும், இந்த உறவினரும் உண்மையாக நடந்து கொண்டதுபோல், அந்த விருந்தினரும் கபடமற்று யதார்த்தமான தன்மையுடன் இருந்தனரா? இல்லை. கபடமேநிறைந்த இவ்வுலகினில்ஒருவரின் மனத்தை மற்றொருவர் அறிய முயலுதலென்பது வெகு கஷ்டமான வேலை.

ஃ

அவர் தனது நண்பராதலின் அந்த உதவி செய்வது அவருக்கு ஒரு பிரமாதமல்ல வென்று நினைத்து ஒரு காரியத்திற்கு அவரை ஒருவன் கெஞ்சுகிறான். ஆனால், அவரோ, என் செய்ய என்றும், அதில் தனக்கு என்ன லாபம் என்றும் எண்ணிவிட்டு, பிறகு வெறுப்புடன், எவ்விதமேனும் செய்து தொலைக்க வேண்டியதுதான் என்று அவனுக்கு உதவி புரிகிறார். அதை அன்புடனேயே அந்த நண்பர் செய்ததாக அவ்வுதவியைப் பெற்றவன் நினைக்கிறான். வெகுகாலத்திற்குப் பிறகே அவர் வெறுப்புடன் உதவினாரென்றும், அவர் அன்பு உண்மையான அன்பல்ல என்றும் தெரிந்து திகைக்கிறான். பிறர் மனத்தை அறிதலென்பது இலகுவில் முடிகிறதல்லவே!

ஃ

பிறரது குணதிசயங்கள் தெரியாமல் வெளிப் பார்வையில் மயங்கி ஏமாறுவதும் மோசம் போவதும் ஒருபுற மிருக்க, மற்றொரு புறத்தில் சிலரது குணவிசேஷங்கள், இழிதன்மைகள் அவர்கள் மறைத்தாலும் மறைக்க இயலாவாறு எவ்விதமோ வெளிப்பட்டு விடுகின்றன. முதன் முதல் சந்திப்பிலேயே ஒருவித அபிப்பிராயம் தோன்றிக்கொண்டு, அவ்வழியாகச் சிற்சில விஷயங்கள் விளங்கி விடுகின்றன. எனினும், ஒருவரைக்குறித்துத் திடமான அபிப்பிராயம் கொள்வதற்கு முடியாமலே போய்விடுவது முண்டு. ஏனெ

---

வந்த மனிதர் எதற்காக வந்தா ரென்பது உடனே தெரிந்து விடுகிறது. தெரியாதது போலவே இவரது நடிப்பு. சாதாரணமாக வந்ததாகவே அவரது நடிப்பு! இருவரும் குள்ளநரிகளே!

னில், மனிதர்களின் மனம் எக்காலத்திலும் ஒரே தன்மை பொருந்தியதாயில்லை. முன்பு அன்பினரா யிருந்தவர் பிறகு அன்பற்றவராய் விடுகிறார். தனக்கு மனைவி வந்ததும் மாறிப் போனவர்கள் எவ்வளவோ பேர். எத்தனையோ நண்பர்கள் அன்னியர் போலாயினதும் கண்டுள்ளோம். ஒரு காலத்தில் உயிர்த்துணையா யிருந்து ஆதரித்தோர் மற்றோர் காலந்தன்னில் வலியச் செல்லினும் வாவென்பதில்லை. முன்போ நேசம், இன்றோ பகை! அவ்வளவு உறவாக அப்போதிருந்தவர்கள் இப்போதோ எந்த ஆபத்துக்கும் எட்டிப் பார்ப்பதில்லை. நேற்று நமக்கு ஒன்றைக் கொடுக்க நினைத்தவருக்கு இன்று அதைத் தர மனம் வருவதில்லை. நேற்று புன்சிரிப்பு; இன்று வெடுவெடுப்பு! மனிதர்களின் மனம் ஒரு நிமிஷத்தில் ஒரு சிறு சங்கதியில் முற்றிலும் வேறுபட்டுப் போகின்றது. ஆதலின், முற்றிலும் ஒரே அடியாக ஒருவரைப்பற்றித் தீர்மானித்து விடவும் முடிகிறதில்லை. எவனைத் தன் பகைவனாகவும் விரோதியாகவும் நினைத்தானோ, அவனே தன் ஆபத்திற்குத் தன் அருகிலிருந்து தன்னைக் காப்பாற்றி உயிர்பிச்சை தந்தவனாக முடிகிறான். எவர்களைத் தனக்கு எந்தக்காலத்திலும் உதவக்கூடியவர்களென்று எண்ணினானோ அவர்கள் அந்த சமயம் எட்டியே பார்ப்பதில்லை. பரம வேதாந்தி யென்று வணங்கப்போக, அந்தரங்கத்திலோ அவர் சண்டாளத்தனமாய்ப் பல மாதர்களைக் கற்பழித்த காமியா யிருக்கிறார். நல்லவனென்று நினைக்கப் போக, அவனோ கடுநாகமா யிருக்கிறான். சிவப்பான முகத்தின் அழகுபோல் உள்ளுக்கும் பரிசுத்தமாயிருக்கலாமென்று கருதப்போக, அதற்கு எதிரிடையாகக் கொடிய வஞ்சகனாயும் தூர்த்தனாயு முள்ளான். நாணயஸ்தன் போல் தோற்றப்படுபவனே படுமோசக்காரனா யிருக்கிறான். இங்ஙனமாக, உலகம் நிமிஷத்திற்கு நிமிஷம் மாறிப் பலவிதமாகக் காணப்படுகையில் ஒருவரைப் பற்றி யொருவர் உறுதித் தீர்மானமாய் முடிவு சொல்வது எவ்வாறு?

ஃ

ஆயினும், பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதுபோல, சிலருடைய குணங்களும், போலியன்புகளும், காரியார்த்தமாய்க் குலாவும் தன்மைகளும் எப்படியோ குறிப்பாகத் தெரிந்து விடுகின்றன. உறவினர், நேசர் வகையில் விசுவாசமுள்ளவர்களையும், வெறும் நடிப்புக்காரார்களையும் உலகம் கண்டு கொள்ளாமலில்லை. தெரிந்து கொண்ட அந்தத் தன்மையின்படியே தான் அவர்கள் பிறகு காணப்படுகிறார்கள். பரோபகார குணம் குடி-

---

நாமே கல்யாணத்திற்கு நாளிட்டுக்கொண்டால் நடந்து விடுமோ? ஆகும் வேளையும் வரவேண்டும். ஆகுங்காய் பிஞ்சில் தெரியும்.

கொண்டிருந்தோர் பிறகு சுயநலப்பிசாசுகளாகிறார்கள். அவர்களின் குணங்களைத் தெரிந்துகொண்டவன் முன்போல் எதையும் வற்புறுத்திக் கேளாமலும், முன்பு காட்டிய பாத்தியதையின் ஆரவாரங்களைச் செய்யாமலும், அன்புகாரணார்த்தமாகத் தோன்றிய கோபம்—ஆத்திரம்—துடிப்புபோன்றவற்றை இப்பொழுது உணர்த்திக்கொள்ளாமலும் அவர்கள் மாறிவிட்ட போக்குக்குத் தகுந்தபடி பட்டும் படாமல்நின்று தலையாட்டிவிட்டு விரோதம் எதுவும் நேராத வகையில் தூர இருந்துகொண்டு ஒதுங்கி விடுகிறார்கள். சுபாசுபங்களுக்குக் கடிதம் வந்தால் முன்போல் பணச் செலவுகள் செய்து கொண்டு குடும்பத்துடன் புறப்பட்டுப் போகாமல், அரையணா கார்டு ஒப்புக்கு வெளிவுபசாரமும், வெளி அனுதாபமுமாக எழுதிவிட்டு அவ்வளவுடன் நின்று கொள்கிறார்கள். தம் இல்லத்திற்குக் குணம் மாறிய கட்டைகள் வரின் முன்போல் கனத்த உபசாரங்களுக்குப் பணத்தை வாரி யிறைக்காமல், அவர்களைப் போலவே வெளிக்குத் தித்திப்போடு பேசி, நெய்யில்லா உண்டியிட்டுக் கை கழுவிக்கொள்கிறார்கள். அன்புள்ள இடத்தில்தான் கோபதாபங்களும், மனஸ்தாபங்களும், அவற்றிக்குச் சமாதானம் செய்தலும் தோன்றிக் கொள்ளும். அன்பற்ற இடத்திலோ கோபம் கொண்டாலும் அவற்றிற்கு அங்கு எவ்வித மதிப்புமில்லை, மண்ணுமில்லை, சமாதானம் செய்ய வருவோருமில்லை. மாற்றாந்தாயின் முன்பு அழுத குழந்தை தானே தனியே அழுது ஓய்வதுபோல் இவர்களும் தாமே அழுது ஓயவேண்டியதே. ஃ

உலக வாழ்வில் ஒருவரை யொருவர் அறிந்து கொள்ள அபூர்வமாய்ச் சில சந்தர்ப்பங்கள் வாய்க்கின்றன. அவ்வேளையில் அவரவரின் குணஸ்வபாவங்களைக் குறிப்பாய்க் கண்டுகொண்டுவிட முடிகின்றன. சோமு ஒரு கபடனென்றும் சுயநலதந்திரனென்றும் காரியவாதியென்றும் ராமன் நன்றாக அறிந்துவிடுகிறான். ராமன் சிலாக்கியகுணங்களுள்ளவனாயிருப்பினும் அதைச் சோமு மதியாமல் தன் கபடத்தன்மையையும் இச்சகம் பேசும்வகையையும் ராமன் தெரிந்து கொண்டானே யென்பதில் ஆத்திரமடைகிறான். பிறகு ஒரு சமயம் சோமு ராமனின் ஊருக்கு வருகிறான். வழியில் இருவரும் சந்தித்து மகிழ்கின்றனர். அவ்வளவோடு அது முடிகின்றது. தன் வீட்டிற்கு வரும்படி ராமன் சோமுவை அழைத்தானாயினும் அதிகமாய் வற்புறுத்தவில்லை. சோமுவும் ராமுவின் வீட்டிற்குச் செல்லாமலே புறப்பட்டு விடுகிறான். ஒருவரை யொருவர் அறிந்து

---

கடவுள் எல்லோருக்குமே தமது அருட்சக்தியைக் கொடுத்துவிடுவதில்லை. குறித்த முக்கியஸ்தர்களுக்கே தருகிறார். அவர்களிடம் மீறித் திமிர்கொண்டால் அன்றைய புசிப்புக்கே வழியற்றுவிடும். பல வண்டிகளுக்கு ஒரு இஞ்சினைப்பூட்டப்படுகிறது. அந்த இஞ்சினிலிருந்து பிரிந்துவிட்டாலோ?

கொண்டு, பரஸ்பரம் மனம் பிடிக்காமற் போனதின் முடிவு இது. ஒருவரைப்பற்றி யொருவர் அறிந்துகொண்டதை ராமுவும் சோமுவும் வெளியிட்டுக் கொண்டனரோ? அப்படியுமில்லை. எந்தப் பகையும் நேசமுமின்றி விலகிக் கொண்டனர். அதுவே அவர்களுக்கு அதிக மனோசமாதானமாகவு மிருந்தது.

ஃ

ஒருவரை யொருவர் அறிந்து கொள்வதில் முக்கியமாய்க் கவனிக்கதக்க இரண்டு அம்ஸங்கள் உள்ளன. உள்ளன்புடையாரென்று ஒருவரை நன்கறிந்து கொண்ட பின், அந்த அன்புடையாரிடத்தும் சிலரது தூண்டுதல்களினுல் அன்புக்கு எதிரிடையாகிய செய்கைகள் நிகழக்கூடும். அவற்றிற்கு மனம் பொறுத்து, அவர்கள் ஆதியில் உணர்த்திய அன்பைப் பிரதானமாக எண்ணி, இடையிற்றோன்றிய அல்பவிஷயங்களை மறந்துவிட்டு, என்றும் அன்பு வளர்ந்தோங்க நடந்து கொள்ளவேண்டும். மற்றவர் அன்பு குறையினும் தான் அன்பில் மாறக்கூடாது. தான் தனக்கும் ஸர்வேசுவரனுக்கும்பரிசுத்தமாய் உண்மையான அன்புடன் நடந்து கொண்டுசென்று விட்டால், பிறகு தெய்வம் விட்ட வழி விடட்டும் என்ற உறுதியுடன் இருக்கவேண்டும். அன்புக்கு இடர் வருங்காலந்தன்னில் நேருக்கு நேர் சந்தித்துத் தீர்த்துக்கொண்டு பழய வற்றாத அன்பு முகமாய் நடந்து கொள்ளுதலேதக்கது. ஒரு அடி விலகின் இன்னொரு அடியும் விலகுமாதலின், அந்த ஒருஅடியைப் பிடிப்பதற்கு இன்னொரு அடியைத் தொடர்ந்து சென்று பற்றிக் கொண்டு ஒற்றுமைப்படுதலே சாலச் சிறந்தது. இனி, அன்பற்றவரென்று ஒரு சிலரைத் தெரிந்து கொள்ளுங்காலை, அதை நாம் நன்கறிந்திருந்தும் அறியாத தன்மையினராகவே காண்பித்து, அவர்கள் நம்மை அன்னியராக நினைத்து விலக்க முயலுந்தோறும் இன்னும் அதிகமாக நெருங்கி யொட்டிச் சேர்ந்து பழய அன்பினராகவே நம்மைத் தோற்றுவித்தும், நடித்துக் கொண்டும், பிரிவு—பகை—விரோதங்கட்கு இடமின்றி ஸமரஸமாகவே சென்றுவிடப் பார்ப்பதுதான் பக்குவ வழி. ஒருவருடைய நாணயத்தைப் பற்றியோ, அன்பைப் பற்றியோ உள்ள அலங்கோலத்தின் உண்மையை ஒருபோதும் வெளியிட வொண்ணுது. அவற்றை நம் மனத்துள் அடக்கி, நாம் தெரிந்து கொண்டதை மற்றவர் உணராதவாறு செல்லவேண்டும். இந்த இருவகை அம்ஸங்கள் நீங்கலாக, இனி, எவ்வளவு முயலினும் பிறருடைய குணங்

---

எஜமானன் எதிரில் தான் அதிக வேலை செய்வதாய் நடித்துக்கொண்டு, உண்மையாகப் பாடுபடும் வேலையாட்களின்மீது அதிகாரத்தைச் செலுத்துகிருர்கள். எஜமானனே பாசாங்குக்காரனையும், உழைப்பாளியையும் அறிந்தே வைத்திருக்கிருர். சமயம் வந்தால் பாசாங்குக்காரனையும் நீக்கிவிடுகிருர்.

களைப்பற்றி ஒரு நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளுதற்கு இயலாமலே இருக்குமிடங்களில் நாமும் முன்னெச்சரிக்கையோடும், விழித்த கண்களுடனும் இருந்து கொண்டு, அவர்களால் நாம் ஏமாற்றப்படாதிருக்கக் கடவுளை வேண்டியபடி ஸர்வ ஜாக்கிரதையுடனும் நடந்து கொள்ளக் கடவோம். நமது மனம் மட்டும் எக்காலத்திலும் ஒரே தன்மையாய்க் களங்கமற்றுப் பரிசுத்தமாயிருக்குமாகில் அதுவே நமக்கு இவ்வுலகில் பெரிய துணை—பெரிய சக்தி.

நல்லாரோ! அல்லாரோ! நண்பர்கோலோ!
அன்னதுவும் நடிப்புத்தானே!
எல்லார்க்கும் இனிக்கவஞ்சம் இயம்பு
சுயநலநோக்கோ! யாவர் கண்டார்—
தொல்லுலகில் பிறர் மனத்தை?—தோன்றுமையே
மிகுதி; தோன்றினுலும்,
புல்லியர்தம் வஞ்சமனம் பொருட்படுத்தா(து)
ஒழுகுதலே புகழ்ச்சியாமால்.

## தன் ஊர் திரும்புகையில் இடையே தங்குகை.



ஒருவன் தன் ஊர்விட்டு வேற்றூர் செல்லுகையில் பல தினங்கள் தாமதித்துத் திரும்பவே புறப்படுவதால் இடையில் அவன் அன்பர்களின் வேண்டுதலின்படி அவர்களின் இல்லத்தில் இறங்கிக் குலாவிச் செல்லுதல்கூடும். ஆனால், அவன் தன் காரியங்களை முடித்துக்கொண்டு திரும்புங்காலையிலோ மிக்க வேகத்தோடும் தன் இல்லம் சென்று மக்களின் முகம்காண அவாவுகின்றான். அவன் சிந்தையனைத்தும் தன் இல்லத்தின் மீதே யுள்ளது. ஆதலின், இடையில் இறங்கித் தங்கிச்செல்ல அவன் பின்னடைந்து அவ்வாறு வேண்டுகிற அன்பர்களிடம் மன்னிப்பு விரும்புகிறான். மறுமுறை வருங்கால் தங்குவதாகவும் வாக்கு தருகின்றான். அவனை அந்த சமயம் அவன் பிரியப்படி மன்னித்தலே உத்தமம். பிறரது அவசரம் மற்றவர் அறியார்.

பலகாரம் சாப்பிட அழைத்தால் கோயிலுக்குப் போக வேண்டுமே, நேரமில்லையே என்கிறார்கள். இவர்களை அழைக்காமலே ஜாடையாக இருந்திருந்தால், பிறகு அவர்களே வலுவில் வந்து இலையில் குந்தி விடலாம்.

# பொய்யாமை



உலகிற் பெரும் பாவங்கள் ஐந்தாம் எனவும், அவை பொய்—கொலை—களவு—காமம் என்பனவாம் எனவும் உரைப்பர். "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும், உள்ளக்களவு மென்றுறவோர் துறந்தவை" என்றார் "மணிமேகலை"யிலும். இவற்றுட் பொய்யொன்றே மற்றைக் கொலை நான்கிலும் வியாபிக்கும் வலியுடையதாதலின், இதனையே தலைமையான பாவம் என்பர். அது பொய்யுணர்வு, பொய்யுரை, பொய்யொழுக்கம் என மூன்று பிரிவுகளாக வகுக்கப்படும். பிறநாட்டார், இப்பெரும்பாவங்களுட் பலவற்றைச் சிறு குற்றமாகவும் கருதார். பிறநாடுகள் பலவற்றில் கொலையுங் கள்ளும் பாவவுணர்ச்சியில்லாமலே பயிலப்படும். ஃ

இனி, நம்மவர் தலைமையான பாவமாகச் கருதியதற்குக் காரணமாவது :—பொய்யுணர்வு காரணமாகவே கொலை முதலிய பாவங்களெல்லாம் பிறக்கும். மெய்யுணர்ந்த வழியில் அப்பாவங்கள் பிறவாவாம். கொலை முதலியன மனப் பரிசுத்தம் இல்லாதாராற் புரியப்படும். மனப் பரிசுத்தம் சத்தியத்துடன் நிகழுமென்பர். "அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்" என்பது திருக்குறள். கொலை—கள்—களவு—காமம் நான்கும் மனவுணர்ச்சி நன்கமையாத மூடர்களாலும் விலங்குகளாலும்—"இது கொலை, இது கள்ளுண்டல், இது களவு, இது காமம்" என்னும் பாவவுணர்ச்சியின்றி இயல்பாகவே செய்யப்படும். பொய்யோ விலங்குகளால் சொல்லப்படாமல், மானுடப் பிறவியினரால், தந்நெஞ்சால் நன்கு அறியப்பட்டு, இது பொய் என்னும் உணர்ச்சியோடே நிகழ்த்தப்படும்.

ஃ

கொலை முதலிய நான்கும் பிற பொருள்களைப்பற்றி உண்டாகும் விரோதவழியில் தோன்றுவதாம். பொய்க்கு மற்றொரு பொருள் வேண்டாமலே ஒருவன் தன்னிலேயே எளிதில் உற்பத்தி செய்யக்கூடும். ஒரு பொய்யைக் கூறிக் கொலை முதலியவற்றை இயற்றுவித்தல் கூடும். கொலை முதலியவைகளோ பெரும்பாலும் பிற வுடலையும் பொருள்களையும் அழித்து நாசம் செய்யும். பொய்யோ பிறருடைய உணர்வையே கெடுத்து, அவரைக் கொலை முதலிய பாதகங்கட்கு உள்ளாக்குவதற்கும் வழியாக இருக்கும். கொலை முதலிய நான்கும் ஒருவனுக்குக் காயம் உண்டாக்கும் வழியில் செய்கையை நடத்தும். பொய் அவ்வாறு ஒரு அளவுக்கு உட்படாமல் பெருகிச்செல்லும். கொலை முதலியன இப்பொய்யினிடமாக மறைந்து வசிக்கும். பொய் இருண்ட பெருங்காடு போல்வது. கொலை முதலியன அக்காட்டுக்குள் திரிந்து இடர் இழைக்கும் கொடிய விலங்குகள் போல்வனவாம். ஃ

---

அவரவர்கட்குள்ள சந்தேக விஞக்களை "அமிர்த குணபோதினி"க்கு எழுதலாம். அதற்கு மற்ற அன்பர்கள் விடையும் தரலாம்.

கொலை முதலிய வினைகள், அவ்வவ்வினையுள்ள பொருள்களில் மட்டும் நிற்கும். பொய்யாக ஒருவன் ஒன்றைக் கூறுவானாகில், அது பெருகிப் பரவியோடி உலகையே மூடிக் கொள்ளும். நரகம் என்னும் கொடிய அரக்கனது வல்லமைபெற்ற கையிலுள்ள ஐந்து விரல்களுக்குச் சமானமாகுமாம் இவ்வைந்து பாவங்களும். பொய்யென்பது அவ்வைந்து விரல்களுள்ளும் பெருவிரலுக்கு இணையாகும். கொலை முதலிய நான்கும் மற்ற விரல்களாகும். எங்ஙனம் நான்கு விரல்களும் பெருவிரலைத் தொட்டுக் கொண்டே ஒரு வேலையைச் செய்ய முற்படுமோ, அங்ஙனமே கொலை, முதலிய நான்கும் பொய்யைத் தொட்டுக் கொண்டே இயற்றப்படும். இவற்றால் பொய்ப்பாவத்தின் தலைமையை யுணர்ந்துகொள்க.

ஃ

எல்லாத் தீயொழுக்கங்களும் பொய்யறிவின் வடிவாகவே பிறப்பன. யாவும் பொய்யினின்றே தோன்றுவன. பொய்யுணர்வாவது வஞ்சக உணர்ச்சி. அது கடவுள், இம்மை, மறுமை முதலியன உண்டென்று பெரியோர் கூறுவதை எதிர்த்து இல்லையென்று சாதிக்கும். நூலானும், உலகத்தோரானும் கடிந்துவிலக்கப்பட்டவற்றை மிகவும் விரும்பிச்செய்யத் தூண்டும். தீயவற்றையேபுரிந்தாலும், வெளிக்கு நல்லோனாகத்தோற்றுவதற்கும், ஏற்றஇச்சக வஞ்சகமொழிகள், வஞ்சக ஒழுக்கங்களையெல்லாம் செய்யக் கற்பிக்கும். வஞ்சகமொழி, வஞ்சக ஒழுக்கங்களை நிகழ்த்தற்குச் சமயம் வாய்க்காவிடினும், ஒருவன் கொண்ட வஞ்சகவுணர்ச்சிமட்டுமே அவனைப் பெரும்பாவியாக்கிவிடுமென்பது திண்ணம். ஆகவே, உள்ளம்—உரை—செயல் என்னும் மூன்றிலும் பொய் நிகழ்த்தாதிருத்தலே நல்லறமாகும். பொய்யை விட்டொழித்தோர் உலகினரால் போற்றிப் புகழப்படுவோராவர்.




---

வியாபாரியின் நேசம் உண்மையாக இருப்பது கஷ்டம். நாளை வீசை இரண்டணாவுக்கு இறங்கிவிடுமென்று தெரிந்துகொண்டு, இன்று நாலணாவாக உள்ள ஒரு வீசையை நமக்காக மூன்றணாவுக்குப் போடுவதாகக் கூறி நாலைந்து வீசைச் சரக்குகளை நமது தலையில் கட்டிவிடுவார்கள். வியாபாரத்திற்கும் நேசத்துக்கும் எவ்வித சம்பந்தமு மில்லையென்பது அவர்களின் சித்தாந்தம்.



“***அதனினும் கொடிது அன்பிலாப் பெண்டிர்; அதனினுங்கொடிது இன்புற அவள் கையில் உண்பதுதானே” என்பது ஔவைப் பாடல். அவ்விதம் உண்பதற்குத் தலைவிதி நேர்வது—தனக்குத் தோன்றிவிட்ட மக்கள் தாயைப்பிரிய முடியாமல் தவிப்பார்களே என்பதாலோ, அல்லது வெளியில் தன் மானம் சிந்தாதிருப்பதற்காகவோ** இருக்கலாம்.






இன்று கூடிய நமது கடையில் வழ வழத்த வாழப் பழத்தார் "தந்திரக் குள்ளனொருவனை நாணவைப்பதற்கு, அவன் மறைத்துவைத்து வஞ்சித்துக் குலாவிய அவனது உள்ளெண்ணங்களை அவன் எதிரிலோ, அல்லது கடித மூலமாகவோ பளிச் பளிச்சென்று தெரிவித்துவிட்டால் பேசாமல் அடங்கிவிடுவான்" என்று ஒரு பெரிய பிரசங்கம் செய்தார். "அவன் அடங்கிவிடுவது சரிதான்; ஆனால் தன் கபட குணத்தை இந்த ஜென்மத்தில் விடப்போகிறதில்லை" என்று குழகுழத்த கொய்யாப்பழத்தார் நவின்றார். "எவ்வளவு கபடனானாலும் சில அவசிய சங்கதிகளில் அவன் எவ்வளவோ உதவி செய்யவும் துணையாக வந்துவிடுகிறான்; அது தன்னை யறியாமலே உண்டாகிற தேவகுணமாயினும், அடுத்த நிமிஷத்தில் பிசாசின் குணம் தோன்றிப் பழயபடி வஞ்சக நெஞ்சினனாகிறான்" என்று ஆமவடைப் பண்டாரம் பகர்ந்தார்.

ஃ

"பெண்களுக்குப் பெண்கள் வெகு உதவியாக இருப்பர். இலவசத்தில் முக்கிய வேலைகளையும் செய்து தருவர். இன்று வேலை அதிகம், நீங்கள் அந்த இடத்தைக் கொஞ்சம் மெழுகிவிடுங்கள் என்று ஒரு பெண் மற்றொரு பெண்ணை வேண்டிக்கொண்டால் உடனே சாணிச் சட்டியுடன் மெழுக அந்தப் பெண் தொடங்கிவிடுவாள். இவ்விதமே, சமையல் காரியங்களிலுங்கூட இருந்து சில்லரை வேலைகளைச் செய்து கொடுத்து உதவுவர். அது அவர்களுக்கு சாதாரண வேலையாகவும் இருக்கும். புருஷர்களோ இவ்விதம் பிறருக்கு உதவி செய்வதில் அவ்வளவு விசேஷித்த கைக்காரர்களல்லர்; பெண்களுக்குச் சுலபமாய்ப் படும் வேலை, புருஷர்களுக்கு அதே விதமான ஒரு சிறு சங்கதியிலும் அதைச் செய்து தருவதில் தங்களைப் பிரமாதப்படுத்திக் கொள்வதாக இருக்கும். ஆண்மக்களின் சங்கதிகள் சுய நலத்துடனேயே விசேஷமாகச் சம்பந்தப்பட்டு இருக்கின்றன" என்று அல்லா பிச்சையார் இயம்பினார்.

ஃ

"எலியைத் தேடிக் கண்டு பிடிக்க முயன்றால் அது இலகுவில் அகப்படாது. அது இருக்கும் இடத்திற்கு நீ போகாதே; நீ இருக்கும் இடத்திற்கு அது தானாகவே வரும் படி செய்து சிக்க வைத்துவிடு. எலி பிடிக்கும் பெட்டியை உள்ளுக்கு ஒரு உணவுடன் திறந்து வைத்துவிடு. நீ தேடிப் போகாமலே எலி தானாக வந்து அப்பெட்டிக்குள் புகுந்து அகப்பட்டுக்கொண்டு விடும். அவ்விதமே, உன் விரோதிகளைத் தேடிச் சென்று கெடுதி செய்ய முயன்றால்

---

நம் வீட்டிற்கு வந்தார்கள், தங்கிப் போனார்கள் என்பது ஒரு விஷயம்; ஆனால், அவர்களை நாம் பிரீதித்ததோ, அவர்கள் நம்மைப்பிரீதித்ததோ அல்லது பிரீதிக்க வில்லையோ வென்பது அது வேறே ஒரு விஷயம்.

அவர்களும் அகப்படார். அவர்கள் உன்னிடம் வரும்படியாக ஒரு முக்கிய சங்கதியை உற்பத்தி செய்து விடு; அவர்களும் அதற்காக உன்னிடம் வலிய வரும்போது உன் எலிப் பெட்டிக்குள் அகப்பட்டுக் கொண்டு விடுவார்கள்'' என்று தொந்தி செட்டியார் உரைத்தார்.

ஃ

"எல்லோருக்கும் தலையாட்டுகிற மனிதன் நமது பக்கத்திலிருந்து பேசமாட்டான். அவனை நம்புவது வீண். அவன் எதிலும் பட்டுக்கொள்ளாத பசபசப்புப் பேர்வழி'' என்று இஞ்சி பச்சடியார் இசைத்தார்.

ஃ

"தனது அக்கிரமங்கள் அதிகப்படுந்தோறும், தனக்குள்ள பணத்தின் பலமும் மனுஷ்யர்களின் பலமும் வெகுவாகக் குறைந்து போகும். ஒருவனைக் கண்ணீர்விட்டுக் கதறச் செய்யும்போது—கடவுள் ஒருவர் உண்டு—என்பதை மறந்துவிட்டாலும், அதற்கு அடுத்த சில மாதங்களில் தனக்கு ஏற்படும் கனத்த நஷ்டத்தால்—"அவன் விட்ட கண்ணீரின் பலனே இது''—என்று தன்னில் தானே நினைத்துக்கொண்டு நோகவேண்டியும் வந்துவிடும். உடனே இது புலப்படாது—பிறகே இது தெரியும்'' என்று பம்புளிமாஸ் பக்கிரி பகர்ந்தார். ஃ

"உலகில் நல்லவர் தீயவர் அனைவரையும் ஒரே மாதிரியாகப் பாவித்து அவர்களுடைய மனப்போக்கை ஆராய்ந்து பார்த்தால் 100-க்கு 90-சந்தர்ப்பங்களிலே பணம்—பசி—வறுமை—இவற்றின் பாடுகளினாலே யே நெறிபிறழ்ந்து போயினர் என்று ஏற்படும்'' என்பதாய் அந்தோணி முத்து தமது ஆராய்ச்சியை விவரித்தார். ஃ

"போனதெல்லாம் போக, யாவற்றையும் மறந்துவிட்டுக் குடித்தனத்தை நடத்துவோமென்றால், மனைவியின் தடித்தன புத்தியும் மூர்க்கமும் அவன் நினைத்த இன்ப நினைவையும் மண்ணாக்கி வாழ்க்கையில் வெறுப்பு பெருகும்படி செய்து விடுகிறது. மக்களின் வாஞ்சையும் மனைவி கொடுமையில் மாறி, பாசமும் ஒழிந்து, அனைவரையும் உதறிவிட்டு அன்னியநாடு சென்று, இரண்டொருநாள் அனைவருக்குமாக வாய் விட்டுக் கதறியழுது சாந்தமாகி அவ்வளவுடன் மறந்து, அங்கு ஒரு பிழைப்பு தேடிக்கொண்டு கவலையும் வெடுவெடுப்புமில்லாச் சோறு கால் வயிறு போதுமென்று வாழ்ந்துக் கடவுளிடம் போய்விடுகிறான். புருஷனைப் பிடுங்கித் தின்ற பூதகியோ அவன் இறந்ததே தெரியாமல் இன்னும் சுமங்கலியாகவே இருந்து கொண்டு, சீயக்காய் தூள் வாங்கியதற்குப் பதிலாக இலுப்பைக் கட்டியை வாங்கும்படியான கதிக்கு வந்து, கையிலுள்ளதும் தொலைந்து, அன்பாயிருந்தவரும் தூர விலகிவிட, எவரும் எட்டிப் பாராதவர் ஆக, ஏங்கி, கண்டார் காறியுமிழக் கேவலப்பட்டு நடுத்தெருவுக்கு வந்துவிடுகிறாள். நன்றாயிருந்த குடும்பம் புருஷனைப் படுத்திய பாட்டால் இந்தக் கதிக்கு நெருங்கிவிடுகிறது. இதில் இந்த மாதரசி வாரிக்கொள்ளும் லாபமென்னவோ?'' என்று விசிறி மடிப்பு ஜரிகை வேஷ்டியார் பகர்ந்தார்.

ஃ

---

"அமிர்த குணபோதினி''க்கு ஒவ்வொரு அன்பரும் ஒரு புது சந்தாதாரரைச் சேர்த்துக் கொடுத்து அபிவிருத்தி செய்ய வேண்டுகிறோம்.

"ஒரு பெரிய இரும்புத் திருகாணி அது சேரக்கூடிய யந்திரத்துக்குத்தேவையாயிருக்கையில் அதன் விலை எட்டணுவாகலாம். எந்த யந்திரமும் கிடைக்காமல் அது குப்பையில் கிடக்கும்போதோ அது ஒரு காசுக்குக்கூட விலைபோவது கஷ்டமே. அவ்விதம் அல்பமாய்விட்ட அந்தத் திருகாணி அதற்குரிய யந்திரத்தில் பூட்டப்பெற்றதும் அந்த யந்திரத்தின் முக்கிய பழுதை நீக்கி, பூரண வலுவுடன் வேலை செய்ய வைத்து, ஒரு புது சக்தியையும் உண்டாக்கிவிடுகிறது. அதுபோலவே, கல்விமானே, தொழிலாளியோ அவனது வித்தை உபயோகப்படக்கூடிய இடத்தில் சேர்க்கப்பட்டு விட்டால் அவன் எவ்வளவோ மதிப்பில் உயர்ந்து, பெரிய ஸம்பாதனைக்கும் தக்கவனுகிவிடுகின்றுன். அவ்வித தருணம் கிடைக்காத வரையில் குப்பையிற் கிடந்த திருகாணிபோல் உலகுக்குப் பயனற்றவனுகிறுன். அவ்விதம் பயனற்றுக் கிடப்பவனை அதற்குரிய தருணம் வந்து ஒரு வேலையிற் சேர்த்துவிடின் யந்திரத்துடன் இணைக்கப்பட்ட திருகாணிபோல் புது சக்தி கூடி மகா நிர்வாகியாய்ப் புகழப்படுகிறுன். எதற்கும் அதிர்ஷ்டம் வேண்டும்" என்று அங்கலாய்ப்புப் பிள்ளை கூறினுர். இத்துடன் நமது கதையும் பூர்த்தி பெற்றது.

'பகதூர்' பொன்வண்டு செட்டியார்.

**ஒரு தினத்து வீட்டுச் செலவு.**

காலையில் பலகாரம் 4-அணு. பால் 2-அணு. கடைச்செலவு 4-அணு. காய்கறி 3-அணு. எண்ணெய், சில்லரை செலவு 3-அணு, ஆக ரூபாய் ஒன்று ஒரே நாளில் தீர்ந்துவிடுகிறது. இந்த ஒரு ரூபாயை "அமிர்த குணபோதினி"க்குச் செலுத்தினுல் பிரதிமாதமும் ஐம்பது பக்கங்களுடன் வருட முழுமையும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். மொத்தம் 960-பக்கங்களுக்கு ஒரே ரூபாய்தான் சந்தாவாகச் செலுத்துகிறோம்.

## அவருடையது முதலிலே! உன்னுடையது கடைசியிலே!

தன் சொந்த விஷயம் சொல்ல வருகிறுனென்று பிறர் நினைக்கும் வேளையில், அவர்களின் விஷயமாகவே பேசவந்தவனுய்க் காண்பித்து அவர்களுக்கு உதவி செய்ய வந்தது போல் பேச்சுக்களைத் தொடங்கிக்கொண்டு போ. உன் சொந்தகாரியமாகப் பேசவந்தாயென அவர்கள் நினைத்த நினைவையும் மாற்றித் திருத்திவிடு. பிறகு அவர்கள் உன் உதவிக்கு மகிழ்ந்து உன்மீது அன்பா யிருக்கையில், மெதுவாக அந்த சமயம் உன் காரியங்களை வணங்கித் தெரிவித்து சகாயம் செய்யும்படி கேட்டுக் கொண்டால் அது வெற்றி தரும்.

# மகான் காந்தி பாப்பா பாட்டு.

(குறவஞ்சிச் சந்தம்.)

சாந்தத்தில் தருமரிணை காந்தி மகான் பாப்பா
சத்தியத்தில் அரிச்சந்திரன் காந்தி மகான் பாப்பா
பாந்தத்தில் புத்தர் பெருமான் காந்தி மகான் பாப்பா
பக்தியில் பரமஹம்சர் காந்தி மகான் பாப்பா

பாரததேவி புதல்வன் காந்தி மகான் பாப்பா
பாரெங்கும் புகழுடையோன் காந்தி மகான் பாப்பா
மாறு வைராக்கிய முடையோன் காந்தி மகான் பாப்பா
வீறன வாக்குடையோன் காந்தி மகான் பாப்பா

காந்தி காந்தி காந்தி யென்ற காந்தி மயமே பாப்பா
கடவுளாக விளங்குகின்ற காந்தி மகான் பாப்பா
சாந்தி சாந்தி சாந்தி யென்ற சாத்மீகமே பாப்பா
சகலரின் துதிபெறுவோன் காந்தி மகான் பாப்பா

எல்லோரும் ஓர் இனமென் றெடுத்துரைக்குங் காந்தி
இல்லாமை யகற்ற வந்த எம்பெருமான் காந்தி
கல்லாரும் கற்றவரும் களிபெறச் செய் காந்தி
கொல்லாமையை விலக்கும் குருநாதன் காந்தி

சொல்லும் செயலும் சமமான சுருதியுள்ள காந்தி
பொல்லாத புல்லருக்கும் புத்தி புகட்டுங் காந்தி
நில்லாத ஆடம்பரம் நீக்கவந்த காந்தி
நல்வித வாழ்க்கைக்கு நியமம் நவிலுங் காந்தி

பண்டுநாட் பெரியோர்கள் பான்மை சேர் காந்தி
பாரத மாதா பெற்ற பாக்கியவான் காந்தி
கண் கண்ட காட்சியான கலியுக காந்தி
காரணவுதார சிங்கம் கருணையுள்ள காந்தி

கதர் கதர் கதரென்று கானம் செய்யுங் காந்தி
கசடறக் கற்ற வித்வ கலைஞானக் காந்தி
மதம் மதம் மதமென்ற சர்வமதக் காந்தி
மௌன குருவாய் விளங்கும் மகிபன் திருக் காந்தி

ஊக்கம்பெருமைநோக்கம்வேண்டும் உனக்கு எந்தன் பாப்பா
உத்தமன் நம் காந்தி நாமம் உச்சரிப்பாய் பாப்பா
ஏக்கநெஞ்சின் பல குறைகள் ஈசனுக்குரை பாப்பா
இந்தியா தெய்வத் திருநாடென் றெண்ணிடுவாய் பாப்பா.

சத்தியம் பொறுமை தியாகம் உனக்கு வேண்டும் பாப்பா
சற்சனரின் திருவடிக்குச் சரணம் செய்வாய் பாப்பா
நித்திய முன் தாய்மொழியை நமஸ்கரிப்பாய் பாப்பா
நித்திரையிலு மதனை நேசிப்பாய் பாப்பா

சக்தி சக்தி சக்தி யென்ற சங்கீதம் பாப்பா
சந்ததம் நமக்குள்ள செம்பொருள் பாப்பா
பக்தி பக்தி பக்தி யென்ற பசும் பண்பு பாப்பா
பலயுகம் நமக்குள் பழம் பொருள் பாப்பா

(இந்திய மித்திரன்.)

மதுரை—திரு. மு. நாராயணசாமி பிள்ளை.

## காரிய அபிமானம்.

ஒருவனுக்கு ஒன்றைச் செய்து கொடுக்கத் தனக்கு வசதிகள் இருந்தும் செய்துதர மனம் வருவதில்லை. ஆயினும், அவனால் தனக்கு ஆகவேண்டிய காரிய மிருப்பதால், அவனுக்கு வேண்டியதைச் செய்து கொடுத்துத் தொலைக்க நேருகிறது. அந்தத் தன் காரியம் தீர்ந்ததும் அப்போது வைத்த அபிமானமும் பறந்து விடுகிறது. சிலர் தங்களின் சங்கதிகளுக்காகப் பிறரை வெகு நல்லதனம் செய்து கொண்டு கொஞ்சுகிறார்கள். அவர்களைக் கொண்டே தங்களின் காரியங்களையும் வெகு பக்குவமாக முடித்துக் கொள்கிறார்கள். யாவும் ஆனபின்போ, அவர்கள் இனி என்ன பகைத்தாலும் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை யென முடிவு கட்டிவிட்டு உடனே புதுவிதமான மனிதர்களாகி விடுகிறார்கள். இதற்கே காரிய அபிமானம் என்பது.

---

வீட்டுக் காரியங்களைக் கவனியாமல் தூரவிலகிக்கொண்டு ஆனகாரியங்களுக்கெல்லாம் குறைவுகள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய ஒரு சிறு உதவியையுமே எதிர்பாராமல் மற்றவர்கள் காரியங்களை நடத்திக் கொண்டும் போய்விடுகிறார்கள்.

---

ஒருவன் யோக்கியமும், பரிசுத்தமும், பாவபுண்ணியத்துக்குப் பயந்து நடப்பதுமாயுள்ளவரையில் அவனைக் கையாலாகாதவன் என்று அல்பமாய் நினைக்கிறார்கள். அவன் யோக்கியத்தைவிட்டு முரடனாய்விடுகிறபோதுதான் அவனுக்கு அஞ்சி மதிக்கிறார்கள்.

# பத்திரிகை ஆராய்ச்சி

## நவநாகரிக சகோதரிகள் :—

நமது சமூக நவநாகரீகச் சகோதரிகள், நமது பண்டைப் பெரியாரின் கொள்கைகளில் காலமாறுபாட்டிற் கேற்ப தள்ளத்தக்கவைகளைத் தள்ளிக் கொள்ளத்தக்க உத்கிருஷ்டமானவைகளைக் கொண்டு குலமணிகளாக—இல்லற இராணிகளாக—கிருகலக்ஷ்மிகளாக—உலகிற்குப் பதிவிரதா தரும போதனை யூட்டவல்ல குருஸ்தானமாக—உண்மை இந்திய நாரீமணிகளாகப் பிரகாசிக்க வேண்டுமென்பதுதான் நமது பேரவா.

" இந்திய மித்திரன் "

## தமிழ் நாவல்கள் :—

தமிழுலகில் தற்போது நாவல்கள் என்னும் இன்பக்கதைகள் முதனூல்களாகவோ அல்லது வழிநூல்களாகவோ பெருகி வருவதை நாடோறும் காண்கின்றோம். மக்களின் முயற்சிகளும் உணர்ச்சிகளும் பெருகப் பெருக மனோபாவமும் சிந்தனா சக்தியும் உடனே பெருகிக் கொண்டு வருவது இயல்பு. பல நாட்டு மக்களின் கலப்பால் விவகார ஞானமும் முதிர்ந்து வருகின்றது. அத்தகைய ஊக்க நிலைமையிலும் முயற்சி வழியிலும் தமிழ்நாடு சென்ற முப்பது நாற்பது வருடங்களாக அதிகம் ஈடுபட்டு முன்னேறி வருகின்றதென்பது பெருகிவரும் அதன் நாவல் இலக்கியத்தால் காணலாம். பண்டித நடேச சாஸ்திரி, பாரதி, வடுவூர் துரைசாமி அய்யங்கார், ரங்கராஜா, ஆரணி குப்புசாமி முதலியார், ராமாநுஜலு நாயுடு முதலான கற்பனைக் கதாசிரியர்களின் நாவல்கள் தமிழ் நாட்டில் லட்டுபோல் விற்று வருவது பிரசித்தம்.

" தமிழ் நேசன் "

## சீனரின் நட்பு வசனங்கள் :—

1. பிரசித்தமான மித்திரன் ஒரு நிதியாகிறான்.

2. எதுவரை ஒருவனுக்கு நல்ல மித்திரன் கிடைக்கவில்லையோ, அதுவரை தான் ஸ்னேகிதனாக ஆகின்றது நல்லதன்று ; ஸ்னேகிதனாக ஆகாதது மிக்க நன்மை.

3. எப்பொழுது ஸ்னேகமுண்மையா யிருக்குமோ, அப்போது பேச்சு அடக்கமா யிருக்கும்.

4. பரஸ்பர விசுவாஸம் ஸ்னேகத்தின் வேராகும்.

5. ஒருவனுடைய இருதயத்தை நன்கு எவனறிகின்றானோ அதுவே சரியான ஸ்னேகம், அதுதான் நல்லறிவு.

6. நல்ல கண்ணாடி யின்றி ஒரு ஸ்திரீ தன் ரூபத்தைப் பார்த்துக் கொள்ள முடியாததுபோல், உண்மையான மித்திரனில்லாவிடில் ஒருவன் தன் துர்க்குணங்களை அறிய முடியாது.

7. உசித மில்லாக் காரியங்களால் நேர்வது கெடுதியே.

8. ஜலத்தில் மூழ்கும் மித்திரனைக் கரையிலிருந்தே பார்த்துக் கொண்டிருக்கும் ஸ்னேகிதன் பொய்யான, கபடமான, ஸ்னேகிதன்.

9. தூரத்தி லிருப்பதினால் ஒரு ஸ்னேகிதனுடைய சினேகம் வெட்டுண்டு போகாது. ஒட்டிக்கொண்டேயிருக்கும். அது எங்ஙன மெனில், தாமரைத் தண்டு முறிக்கப்பட்ட போதிலும், அதிக சூட்சுமமான தந்துக்களால் ஒட்டிக்கொண்டிருக்கும்.

(இந்து நேசன்.) T. A. V.

# நாநா விஷயக் குறிப்புகள்.

ஆடம்பரமற்ற வாழ்வே ஆத்ம சக்திக்கு அனுகூலமானதென்று மகாத்மா சொல்லுகிறார். இயேசு நாதர் செய்த உபதேசமும், காந்திசெய்யும் உபதேசமும் ஒன்றுபோல் இருக்கின்றன.— ஆசார்ய பிரபல சந்திரசேய்

ஃ

பணம்நஷ்டம் புத்திலாபம்:— ஒருவன் தன்னுடைய உறவினனுக்குக் கடன் கொடுத்தானும். பணம் திரும்பி வரவில்லே. பணத்தைக் கணக்கில் பிறகு வரவு வைத்துவிட்டு "புத்தீ விலேக்கு வாங்கினது ஆயிரம் ரூபாய்" என்று அந்தத் தொகைக்குச் செல்லெழுதி விட்டானும்.

ஃ

நல்லெண்ணமும் பரஸ்பர நம்பிக்கையும் இருந்தால், எத்தனை பெரிய தடைகள் குறுக்கிட்டாலும் அதை நிவர்த்தித்து விடலாம்.

ஃ

வியாபாரிக்கும் அங்கு சரக்கு வாங்கவருபவனுக்கும் அன்னியோன்னியமில்லே. நாளை விலே இறக்கமென்று கண்டு அதை மறைத்து இன்றுள்ள விலேக்கே அதிக சரக்குகளே விற்றுவிட முயலுகிறான். மற்ற இடங்களில் ஒரு படி நான்கணுவாக இருப்பதை விசாரியாமல் நம்பி வாங்குகிறவனிடம் வியாபாரி படி ஐந்தணு என்று கூறி விற்றுவிடுகிறான். இத்தகையோருக்கே மிகவும் தெரிந்த வியாபாரி என்று பெயர்.

ஃ

நமது வாக்கு ஒரு பிரமாண பத்திரத்துக்குச் சமமானதாக இருக்க வேண்டும். —மகாத்மா.

ஃ

ஒருவர் மொழி :—என்னுடைய ஊகிப்பில் தங்களுக்கு இருக்கிற ஸம்சயத்தைக் கடவுள் தீர்த்துவைக்க வேண்டுமென்று கோருகிறேன்.

ஃ

ஒற்றுமை ஏற்படுவதென்றால் முதலில் ஆத்ம சுத்தியடைந்து பரஸ்பர நம்பிக்கை கொள்ளவேண்டும்.

—மகாத்மா.

ஃ

வெற்றியடைந்தால் எவ்வளவு அனுகூலம் கிடைக்குமோ, அவ்வளவு அனுகூலம் தோல்வியினுலும் கிடைக்கும்படி செய்துகொள்ள வேண்டும்.

ஃ

நல்லுணர்ச்சி நீடிக்கப்படுவதற்கு எவ்வளவோ சிரமப்படவும், ஜாக்கிரதையாய் இருக்கவும் வேண்டியிருக்கிறது. நல்லுணர்ச்சியைக் கெடுத்துக்கொள்வதோ ஒரு நிமிஷத்தில் செய்துவிடக்கூடிய சுலப சங்கதி.

ஃ

அதிகமாகச் செலவிடுவது அந்தந்தக் குடும்பத்தின் முதுகெலும்பை ஒடிப்பதற்குச் சமம்.

ஃ

---

சிலஇடங்களில் தாய்க்குத் தன் புத்திரிகளின்மீது உள்ள அபிமானம், புத்திரர்கள் எவ்வளவுதான் அடங்கி நடந்தாலும் உண்டாகிறதில்லே. ஏனே?

இல்வாழ்க்கை என்பது துன்பங்களைத் தாங்கும் போராட்டமே. நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் வளர்ப்பதற்குத் தக்கபடி இன்ப நிலையும் இருக்கும்.

ஃ

நான் ஆண்டவனுடைய போர் வீரனேயாவேன். *** இரு ஸகோதரர்களாகிய நாங்கள் இஸ்லாத்திற்கும், ஸமூகத்திற்கும் செய்துள்ள ஊழியத்திற்கும் எங்கள் தாயாரின் அரிய பயிற்சியே மூலாதாரமாகும். அவர் எங்கள் பிள்ளைப்பிராயத்தில் எங்களில் விதைத்துள்ள வித்தின் பலனே அது.

—மௌலானா ஷவுகத்தலி.

ஃ

கால அனுபவம் அநேகரை ஓர் அறிவாளியாகச் செய்துவிடுகிறது.

ஃ

வால் தலையை ஆட்டிவைக்கும் நிலையில் ஒரு வீட்டின் சங்கதிகள் இருக்குமானால், அக்குடும்ப நிலைமை பிறகு எவ்வெவ்விதம் மாறுமோ— யாரால் நிர்ணயிக்க முடியும்?

ஃ

மனிதர்களுடைய சிறந்த ஞாபகச்சின்னம் கல்லினால் செய்யப்பட்டதன்று. அவர்களுடைய காரியங்கள் ஜனங்கள் மனதில் என்றும் அழியாமல் இருப்பதேயாகும். —மகாத்மா.

ஃ

ஒவ்வொரு தேசத்தின் மதமும் மற்ற தேசங்களின் மதங்களைப்போல சிறந்தது தான். இந்திய மதங்கள் இந்திய மகா ஜனங்களுக்குப் போதுமானவை. பாரமார்த்திக வழியில் நம்மை எவரும் திருப்ப வேண்டியதில்லை. கிறிஸ்துவப் பாதிரிமார் இந்தியாவில் ஜீவகாருண்ய வேலையைச் செய்யட்டும். மதம் மாறுதல் வேலையைச் செய்யவேண்டாம்.

—மகாத்மா.

ஃ

ஒரு தேசத்தை ஜெயித்த இன்னொரு தேசம் திரும்பவும் அந்த ஜனங்களிடமே அதைக் கொடுத்து விட்டதாக நாம் கேள்விப்பட்டதேயில்லை. அவர்களுடைய முறையைப் பின்பற்றி அவர்களுக்கு விரோதமாக வேற்றுமை காட்டாமலிருப்பதாக நிச்சயமேற்பட்டால் நமக்கு ஓரளவு அதிகாரம் அளிப்பார்கள்.—திருவாங்கூர் மாஜி திவான் பேஷ்கார் ஸ்ரீமான் என். சுப்பிரமணிய ஐயர்.

ஃ

பெயருக்குக் கடைசியில் ஐயர் அல்லது ஐயங்கார் என்று சொல்லிக் கொள்ளுவதைப் பலர் விட்டுவிடுகிறார்கள். பலர் சிகை (குடுமியை) எடுத்து விடுகிறார்கள். இவை எல்லாம் பிறரைப் பார்த்துச் செய்யும் காரியங்களே. உலகத்தில் இதர தேசங்களில் இப்படிச் செய்கிறார்களா என்று கவனியுங்கள். நமது முறைகளை நாம் கைவிடாமலிருந்தால் எல்லோராலும் பாராட்டப்படுவோம்.—என். சுப்பிரமணிய ஐயர்.

ஃ

நிதானபுத்தி சொல்பவர்களும் கூட மௌனமாகித் திகைக்கும்படி குடும்பத்தில் சில சமயங்களில் சகிக்க முடியாத ஸம்பவங்கள் நடந்து விடுகின்றன.

———



# ஹாஸ்ய சஞ்சீவினி



சேஷி:—ஒரு கோழி முட்டை முக்காலணுவா? எல்லாம் என் சேவ லிடம் உன் கோழி பெற்ற முட்டை கள்தானே? அரையணு வீதம் கொடு.

சுப்பி:—இனி உன் சேவலைப் பெட்டியில் வைத்துப் பூட்டிக் கொள். அப்பொழுதுங்கூட என் கோழி முட்டை வைக்கும். அதற்கு மாப்பிள்ளைப் பஞ்சம் கிடையாது.

---

அன்பில்லாத மனைவி:—உம்மால் என்ன ஆகும்? போலீஸார் உம்மைக் கைது செய்யும்படி பண்ணுகிறேன். என் கையிலுள்ள கயிற்றைப் பார்த் தீரா?— இதோ தூக்குபோட்டுக் கொள்ளப்போகிறேன்.

சகிப்புள்ள கணவன்:— நான் கஷ்டப்படவேண்டுமென்று நீ தூக்கு போட்டுக்கொள்ளப் போகிருய்? கஷ் டப்படப்போவது நானல்ல; உன் பிள் ளைகள்தான். எனக்கு இன்னொருத்தி உடனே வந்துவிடுவாள். உன் குழந் தைகளுக்குத் தான் பெற்ற தாயர்க ளவளும் அகப்படாள். அத்துடன் எனக்கு இனி வருகிறவளிடம் உன் குழந்தைகள் சித்திரவதைப்படவும் நேரும், உன் பாடு.

---

மருந்து வியாபாரி:— இந்த லேகி யம் டப்பி ஆறு ரூபாய் பெறும். இதை எடுத்துக்கொண்டு ஆறு ரூபா ய்க்குப் பத்திரிகையில் எனது மருந்து விளம்பரத்தைச் செய்துவிடுங்கள்.

பத்திரிகையின் மானேஜர்:— ஒரு டப்பி லேகியம் ஆறு ரூபாய் விலை சரிதான். விற்ருல்தானே ஆறு ரூபாய்? விற்காவிடிலோ அசல் விலை யான ஒரு ரூபாயோ அரை ரூபாயோ தானே பெறும்? அந்த அசல் விலை யின் கணக்குப்படி 6-டப்பியோ, 12 டப்பியோ தந்தால் உங்கள் விளம்பரம் பிரசுரிக்கிறோம்.

---

பழய கடைக்காரன்:— பழக்கடை வைக்கப்போகிருயா? அழுகிப்போன பழங்களை என்ன செய்வாய்?

புதிய கடை வைப்பவன்:— அழுகி யதை எறிந்துவிட்டு நல்ல பழங்களை விற்க வேண்டியதுதான்.

பழய கடைக்காரன்:— அட முட் டாள்! அழுகியதையல்லவா முதலில் விற்றுக் காசாக்கவேண்டும். இது தெரியாமல் நீ என்ன கடை வைத்து வாழப்போகிருய்?

---

அவன்:— ஊருக்குப்பால் குடிக்கி ருயா? உடம்புக்குப்பால் குடிக்கிருயா?

இவன்:— இரண்டுக்கும்தாண்டா அப்பா.

---

மல்லிகை:— சுகேசா! எப்பொ ழுது யான் சுகுணனை மணப்பதென் றெண்ணினேனே அப்பொழுதே யான் அவர்தம் மனைவியாயினேன். சிநேகன் மனைவி உன் தங்கைக்குச் சமானமானவளென்று நீ அறியாயோ? சிநேகனுக்குத் துரோகஞ் செய்ய லாமோ?

சுகேசன்:—அச்சுகுணன் இறந்து விட்டானென்று கேள்விப்பட்டபிறகு தானே யான் உன்னைக் காதலுறுகின் றேன்.

மல்லிகை:— அப்படித்தானிருந் தாலும் யான் நூலிழந்தவளாகிறேன்.

அவ்வாறிருக்க, நீ என்னை மணப்ப தாக எண்ணுவதினும் மிக்க மடமை யென்னவிருக்கின்றது? மற்றும், நீ கூறுவது உண்மையாயின் தீயிற் பா ய்ந்து யான் உயிரும் இழந்து விடு வேன்.

சுகேசன்:— காதலில் நண்பனைக் கவனிப்பா ரெவரே?

மல்லிகை:— சுகேசனொழிய மற்ற யாவருங் கவனிப்பார்கள்.

---

உத்தியோகஸ்தர்:— மேஜையின் கால் ஒடிந்துவிட்டது. மனதுக்கு அதிக துக்கம்.

தச்சன்:—உங்களுக்குத் துக்கம்! எனக்கோ ஒரு வேலை கிடைத்ததெ ன்று ஸந்தோஷம்.

---

ராமு:—தங்களைப் பார்ப்பதற்கு வந்தேன்.

கிட்டு:— நன்ருகப் பாருங்கள். இதுதான் என் மூக்கு, அது செவி, அது கண், இது வயிறு-எல்லாம் நன் ருகப் பார்த்துக்கொண்டு சுகமாகப் போய்வாருங்கள்.

---

அவர் :—நாங்கள் எட்டு பேர் கூட்டமாய்க் கிராமங்களில் கதர் விற் கப் போனேம். கதர் பிரசாரம் செய் தோம். நல்ல பிரயாணம்.

இவர் .—ஓகோ அப்படியா! உங் கள் வருகையை ஏற்கெனவே அந்தந் தக் கிராமங்களுக்குத் தெரிவித்திருப் பீர்கள். நல்லதிக்கான காபி,காராபூந்தி யுடன் உங்களை வர வேற்றிருப்பார் கள். பேஷான சாம்பார்! நன்ருகத் தின்று ஊர் சுற்றினீர்களா! இந்த கனத்த சாப்பாடு உங்கள் வீட்டில் கிடைக்கா தல்லவா? இதற்குக் கதர் பிரசாரம் என்று பெயராக்கும்! அப் படித்தானு?

---

பழைய சந்தாதார் :—நான் 200—குறிப்புகள், 4-வியாசங்கள், இன்னும் பத்திரிகைக்கான வேலைகளையும் செய்து தருகிறேன். தங்கள் பத்தி ரிகையை இனுமாகக் கொடுங்கள்.

பத்திராசிரியர் :—அன்புக்கன்றி, ஒரு பிரதி பிரயோஜனத்தை விரும் பிச் செய்கிற, அதற்கென்று சூழ்ந்தி குலாவுகிற சுய நல எலிகள் தேவை யில்லை. தங்களின் எந்த உதவியும் இல்லாமலே பத்திரிகையை நடத்திக் கொள்ள எங்களுக்குத் தெரியும்.

---

ஜானகிராகவன் :—ஏனப்பா தாசி வீட்டையே சுற்றிக் கொண்டு திரிகி ருய்?

விஜயராகவன் :—நான் என்னல் சமாளிக்க முடியாமல் கெட்டுப்போகி றேனே யொழிய, என் நெஞ்சாரக் குற்றமில்லை. நான் அப்படித் துன் மார்க்கனு மல்ல. என்னவோ சகிக்க இயலாத தேக தர்ம அவஸ்தை!

---

வினு :—விவாக மில்லாதவன் யோக்கியனுயிருக்க முடியுமா?

விடை :—வெளிப்பார்வையில் மட் டும் இருக்க முடியும். உள்ளுக்கோ ஊரிலுள்ள ஆசைகளெல்லாம் சூழ்ந்து, ரோகங்களெல்லாம் ஊறி நாறும்.

---

துட்டை:—எந்த மாதத்திலே மாதர் கள் அதிகம் பேசுவதில்லை?

நெட்டை ?—பிப்பிரவரி மாதத்தில் தான். ஏனெனில் அந்த மாதத்திற்கு 28—நாட்கள் தானே? ஆதலின் பேச்சும் கொஞ்சம் குறைவு படும்.






கமலவல்லி:—

[ஸ்ரீமதி T. P. இராஜ லக்ஷ்மி அம்மாள் அவர்கள் இயற்றியது. மூன்று அழகிய படங்களுடன் டபிள் கிரவுன் 1x16-ல் 160-பக்கங்கள் உள்ளது. விலை ரூ. 1—4—0.]

பெண்மணிகள் நூலாசிரியர்களாகத் தோன்றிவரும் காட்சியை நோக்கிப் பூரிக்கின்றோம். கதாநாயகியான கமலவல்லி தனது விவாகத்தை ரத்து செய்து கொண்டு தான் ஆதியிற் காதலித்தவரை இரண்டாம் முறையாக மணக்கின்றாளென்ற கருத்தை நாம் ஏற்றுக் கொள்வதற்கில்லை. இவ்வித சீர்திருத்தங்கள் நன்மையை விடத் தீமையையே அதிகம் பயக்கும். மற்றபடி கதையின் அமைப்பு, அநுபவ வாசகநடை, வஞ்சகரின் சூழ்ச்சி முதலியன யாவும் நன்கு தேர்ந்த ஆசிரியர்களின் தன்மையில் வரையப்பட்டுள்ளன.

அருந்தமிழ் வாசகம்:—

[ஸ்ரீமான் திரு. R. V. சிங் அவர்கள் இயற்றியது. முதல் புத்தகம், இரண்டாம் புத்தகம், மூன்றாம் புஸ்தகம். விலை முறையே $2\frac{1}{2}$, $3\frac{1}{2}$, $4\frac{1}{2}$ அணா கொண்டது.]

குழந்தைகளின் மனத்தைக் கவரும் வண்ணம் நூதன முறையில் இவ்வாசக பாடங்கள் தயார் செய்யப்பட்டுள்ளன, ஆசிரியர் அதி நுட்பத்துடனும் ஒவ்வொரு புத்தகத்தையும் அமைத்துள்ளார். படங்களின் அழகு கண்களைக் கவருகின்றது. படிக்கின்றோம் என்று உணராமலே குழந்தைகள் படிப்பையும் ஒரு விளையாட்டாகவே கருதிக் கற்றுக்கொண்டு விடும்படி அவர்களுக்கான போதனை அமைக்கப்பட வேண்டுமென்பது தேர்ந்த ஆசிரியர்களின் கொள்கை. அதற்கேற்றவாறாக இவ்வாசக பாடங்களுள்ளன. மகாத்மா காந்தி அவர்களைப் பற்றியும் ஒரு பாடம் இதில் வருவதை நாம் போற்றுகின்றோம்.

பஞ்சரத்தினப் பாமாலை :—

[ஸ்ரீமான் ஆ. உ. சுப்பராய முதலியார் அவர்கள் இயற்றியது. உயர்ந்த அச்சு, உயர்ந்த காகிதம், 42-பக்கங்கள். விலை அணா 4.

பல துறைக் கீர்த்தனைகள் அடங்கிய நூல். பாடல்களுக்குள்ள ஒரு தனித்த சக்தி வசன பாகத்திற்கு இல்லை. கவிகளில் பக்தி ரஸம் ததும்புகின்றன. ஒவ்வொரு கீர்த்தனையும் உடனே மனதிற் பதிந்து விடுந்தன்மையில் எளிய நடையினில் கவிதையமைந்துள்ளது. மனத்தை உத்தம மார்க்கத்தில் செலுத்த வல்லது. பொன்போல் போற்றத்தக்க நூலாகும்.

ஸீதா :—

[வங்காளி பிரபல நாடகாசிரியரான த்விஜேந்திரலால்ராய் அவர்கள் இயற்றியது. ஸ்ரீமான் எஸ். என்.

---

கடிதங்களில் கையெழுத்துப்போடும் வேலைகளைமட்டும் செய்துவிட்டுப் போய்விடுகிற உத்தியோகத்தில் சிலர் அமர்ந்திருக்கிறார்கள். அது அவர்களின் பூர்வ அதிர்ஷ்டம். ஆனால், அங்கும் கனத்த பொறுப்பு இல்லாமலில்லை.

சங்கரலிங்க ஐயர் அவர்கள் மொழி பெயர்த்தது. கிளேஷ் பதிப்பு. டபிள் கிரவுன் 1x 16-ல் 190—பக்கங்கள். விலை அணு 12.]

த்விஜேந்திரலால் ராய் அவர்களைப் பற்றிய சரித்திரக் குறிப்பை "அமிர்த குணபோதினி" 2-ம் கமலம் 468—496—ம் பக்கங்களில் காணலாம். அவரது நூல்களின் அருமை பெருமையை இந்த "ஸீதா"வின் மூலமாய் அறியலாம். ஸ்ரீமான் ஐயரவர்கள் மூல நூலின் சுவையைக் குறைவுபடாது வெகு திவ்யமாகத் தமிழில் காட்டியிருக்கின்றனர். என்னவோ ஒரு புஸ்தகம்—கதை என எண்ணிவிடக் கூடியதன்று. இது ஒரு அபூர்வநூல். நூல் முற்றிலும் வர்ணனைகளே. பத ஜோடினையும் வாக்சம்பிரமும் அனுபவித்தறிந்தே சுகிக்கவேண்டும். இயற்கையின் அழகையும், உலக இயல்பையும் வெகு திவ்யமாக விளக்கியுள்ளது. இத்துணை லாவண்ணியத்துடன் விளங்கும் நூலைநாம் இதுவரை கண்டதில்லை. வங்கபாஷா நூல்களுக்கே ஒரு தனிச்சுவை உண்டு போலும். துர்க்கேசநந்தினி, ஆநந்தமடம், பரிமளா, சந்திரசேகரன், தேவிசௌதுராணி இவைகள் ஒரு தனிச்சுவையுடன் ஒளிர்வனபோன்று இந்த "ஸீதா"வும் தமிழ்ச் செல்வர்கட்குப் புது விருந்தாய் ஜ்வலிக்கின்றது. ஒவ்வொருவரும் வாங்கிப் பத்திரப்படுத்த வேண்டிய உயரியநூல் இது. கதையின் ஸ்வாரஸ்யத்தைப் பற்றி இங்கு விவரிக்க நமக்கு சக்தி போதாது.

சென்னைக்கு ஸ்ரீரங்கத்திலிருந்து ரயில் சார்ஜ் ரூபா 2—14—3 தான். இரவு 12-மணிக்கு ஏறினல் காலையில் 8-மணிக்கு சென்னை தான். ஆனல், அதற்கு ஏற்பாடு, முன் யோசனை, மூட்டை கட்டுதல், வீட்டு விஷயங்களை ஒழுங்கு செய்தல் முதலிய பாடுகள் எவ்வளவோ இருக்கின்றன. ரயில் சார்ஜ் மிகக்குறைவென்கிறோம். ஆனல் அதைக்காட்டிலும் மற்ற சில்லரைச் செலவு வகைகள் பத்து பங்கு அதிகமாகிப் பணப்பை காலியாகி விடுகிறது.

## வாடிக்கை யிடம் விட்டுப் போகக்கூடாது.

அரையணு பால் தருவதற்கா பால்காரன் பிரதி தினமும் அந்த வீட்டிற்குத் தவறாமல் வருகிறான்? வாடிக்கையாகப் பால்ஊற்றுவது விட்டுப்போகக்கூடா தென்றல்லவா அவன் அரையணுவுக்கும் பால் ஊற்ற வருகிறான். இன்று வாங்கியது அரையணு பாலானுலும், நாளை அரைப் படியும் வாங்கு வார்களென்று அவனுக்குத் தெரியு மானதால் வழக்கமான வீட்டை விட்டுவிட அவனுக்கு மனமில்லை.

அதிர்ஷ்டமுள்ளவன் எந்தவேலையாய்ச் சென்றாலும் ஜெயமடைகிறான். ஆனல் துரதிர்ஷ்டமுள்ளவன் எவ்வளவு உத்தமமான வேலையில் பிரவேசித்தாலும் விருத்தியில்லை. வேலையும் கெட்டுப்பணமும் வீணாகி நஷ்டமும் வருகிறது.

# அறிவுக்கு உணவு

1. தீர்மானமும் திடசித்தமும் :—எந்தக் காரியத்தையும் செய்யும் வகை இதுவென்று விரைவில் நிச்சயித்துத் தீர்ப்பது தீர்மானம்; அத்தீர்ப்பைச் சார்ந்து முயல்வது திடசித்தம். திட சித்தமுள்ளவர்கள் வேலைக்கு ஒரு விதமாய் மாருமல் எப்பொழுதும் கிரமமாய் நடத்துவார்கள்.

2. தீவிரமுள்ளவர்கள், மந்ததர முள்ளவர்கள்:—இது அவரவர்களின் வேலையில் சீக்கிரம் தெரிந்துவிடும்.

3. அற்ப காரியம் :—அற்ப காரியங்களும் ஆவசியகந்தான் என்று நிச்சயித்து உணரவேண்டும். அற்ப காரியங்களில் சிலவேளை நன்று தீதாகிய பழய வழக்கங்களின் காரியமாகவும், சிலவேளை நூதன வழக்கங்களின் காரணமாகவும் இருக்கக்கூடிய ஆதார விதிகள் அடங்கும்.

4. ஏவும் கட்டளை :—தான் உத்திரவிடக் கருதும் கட்டளைக்கு ஒருவன் கீழ்ப்படியானென்று கண்டால், அக்கட்டளையை விதியாமல் விடுவதே புத்தி.

5. கல்வியின் தாத்பரியம் :—மனுஷர் இம்மையில் நற்குண நற்செய்கை யுடையவராய், கடவுளுடைய திருச்சித்தத்தை அறிந்து, அதற்கு இசைய நடப்பதுதான் அவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்படும் தாத்பரியம்.

6. காரியத்தில் கருத்துள்ளோர்; —எதாவது ஒரு காரியத்தைச் செய்வது ஆவ்சியகமென்று காண்பவர்கள் அதை எளிதில் செய்யமாட்டுவார்கள்; அப்படிக் காண்பதனுல் அசாத்தியமானவைகளும் சாத்தியமாகும்.

7. தேர்ச்சி :—தேர்ச்சி ஏற ஏறத் தண்டனை (சிரமம்) குறையும்.

8. பலாத்காரம்:—அதிகாரத்தை நிலைப்படுத்துவதற்குப் பலாத்காரம் அதிகமாய் உதவாது.

9. விளையாட்டு :— சிறுவர்க்கு இடும் வேலைகளை விளையாட்டுபோல இடவேண்டும். அவர்கள் தங்கள் விளையாட்டென்றெண்ணி ஒரு காரியத்தைச் செய்துமுடிக்க, அதைச் செய்யும்படி சொன்னவனுக்கோ அவனுடைய வேலையைச் செய்து நிறைவேற்றியதாய் முடிகிறது.

10. தடைகள் :— தடைகளை ஜெயிக்கும்போதும், கொஞ்சக் கால மட்டும் முயன்றும் செய்ய முடியாமற் போனவைகளைச் சாதிக்கும் போதும், மிகுந்த பூரிப்பு உண்டாகிறது.

11. விவேகத்தின் துணை :—பிற்காலத்திற்கு உரிய கடமைகளைச் செய்வதற்கு எத்தனிக்க விரும்பும் விருப்பத்தை அபிவிர்த்தி செய்து பயன்படுத்துவதற்கு விவேகம் வேண்டும்.

12. காரிய ஒழுங்கு :—ஒரு காரியத்தைக் குறைவறச் செய்யும் வழக்கத்தின் பயன் இவ்வளவென்று சொல்வது அரிது. செய்வதை

---

கௌரவசிந்தையுள்ளவர்கள் ஒருமுறை சந்திப்பினும் போதும். தங்களின் ஜீவகாலமுற்றிலும் அந்த சந்திப்பின் விசுவாசத்தை மறவாமல் கடித மூலமாகவும் தங்களின் செயல்களாலும் பெருக்கிக்கொள்கிருர்கள்.

நன்ருகச் செய்யச்செய்ய, குறைவு தோன்ருதபடி செய்யும் வழக்கம் உண்டாகும். 'நன்ருய்' என்பது சாதாரண அர்த்தம் தருவதுமன்றி, குறைவின்றி—பூர்ணமாய் என்றும் அர்த்தம் கொள்ளும். நாம் செய்வதற்கும் பிறர் செய்வதற்கும் உள்ள உயர்வு தாழ்வைக் கவனிப்பதில் நன்மை அதிகம் உண்டு.

13. எது தோஷம்?:—பிறர் செய்வதற்குச் சமானமாய் அல்லது அதனினும் உத்தமமாய் ஒன்றைச் செய்ய விரும்புவது தோஷமல்ல. பிறர் செய்வதற்குச் சமானமாகத் தாம் ஒன்றைச் செய்வதற்குத் தமக்குத் திராணியில்லையென்று உணரும் பொழுது, அவர்களிடத்தில் பொருமைகொண்டு மனம் எரிவதே தோஷமாம். ஒன்றை நன்ருகச் செய்யவேண்டுமென்னும் விருப்பம் அதை உத்கிருஷ்டமாகச் செய்யும் அபேட்சையை உண்டாக்குவிக்கும். இந்த அபேக்ஷையினுல் பொருமையுண்டாகாதபடி ஜாக்கிரதைப்பட வேண்டும்.

14. கல்வித்தேர்ச்சியில் பிரியம் உத்தம குணம்:—தாம் கற்கும் கல்விக்கும், பின்பு செய்யக் கருதியிருக்கும் தொழிலுக்கும் சம்பந்தம் உண்டென்று அநேகர் உணருகிறதில்லை. கற்பிக்கப்படும் கல்விகள் எல்லாம் பிற்காலம் செய்யும் உத்தியோகத்தில் பயன்படாதிருப்பினும், மேலும் மேலும் தேர்ச்சி தருமாதலால் எதையும் கற்பதே நன்று.

15. புகழ்ச்சி விருப்பு:—தங்களுக்கு அறிமுகமானவர்களாலும், தங்களுடன் சம்பந்தப்பட்டவர்களாலும் புகழப்பட விரும்பாதவர்கள் மிகவும் சிலர். புகழப்படுகிறவன் தன்னைப் புகழ்கிறவனை நன்கு மதித்தால், அல்லது அவன் செய்கிற புகழ்ச்சியினுல் தனக்குப் பயன் உண்டாகுமென்று உணர்ந்தால், அவன் செய்த புகழ்ச்சியை மதிப்பான்.

16. மாணவர் திறமை:—உபாத்தியாயர் கற்பிப்பதெல்லாம் பாடமல்ல. கற்பிக்கப்படும் பாடத்தில் மாணக்கர் எவ்வளவுவரை கிரகிக்கிருர்களோ அவ்வளவே அவர்களுக்குப் பாடமாம். ஒரு பாடசாலை மாணக்கர் தங்களுக்கு உபாத்தியாயர் கற்பிக்கும் பொருளைக் கருத்தாய்க் கேட்கும் அளவே அவன் திறமையின் அளவாம்.

17. தானே கற்றலின் மேன்மை:—தன் முயற்சியால் பெறும் அறிவு பிறர் கற்பித்து உணர்த்தும் அறிவைப் பார்க்கிலும் அதிக அருமையும் உறுதியுமாகும். பெரும்பாலும் சிறுவருக்குக் கல்வி கற்பிப்பதல்ல, அவர்கள் தாமாகக் கற்கும்படி செய்வதே உபாத்தியாயரின் கடமை.

18. ஒழுங்கின்மையும் காலத்தவறும்:—ஒழுங்கின்மையால் விளையும் கேட்டிலும், காலத்தவருல் விளையும் கேடு அதிகமாகும். ஒழுங்கின்மை ஒழுங்கற்றவர்களுக்குமாத்திரம் நஷ்டமா யிருக்கவுங்கூடும்; காலத்தவறே முழு வகுப்பாருக்கும் நஷ்டமாவது நிஜம். அனுதினமும் காலம் தவருதிருப்பது அரிது. செய்யச்செய்ய, செய்தற்கு அரியவைகளும் எளியவைகளாகும். எந்தக் காரியத்திலும் கால

---

சிலர் தாம் தற்கொலை செய்துகொள்ளப்போவதாக நடித்து வீட்டிலுள்ளவர்களையெல்லாம் ஒருகலக்கு கலக்கிவிடுகிருர்கள். அவர்களின் வாயில் ஸதா தற்கொலை வார்த்தை தான். அவர்களிடம் வெறுப்புமேலிட்டவர்களோ மிகவும் சலித்துத் போய் எக்கதியாயினும் கெடட்டும் என்று விட்டுவிடுகிருர்கள்.

நியதியின்றி அனுகூலமடைவது அசாத்தியமாதலின், யாவரும் தங்கள் தங்கள் கடமைகளைக் காலநியதியோடு நிறைவேற்றுவது ஆவசியகமே. காலநியதியில்லாதவர்கள் தங்கள் கடமைகளைத் தக்ஷணமே செய்யாமல் பின்னிட்டுவைப்பது வழக்கமாதலால், காலத்தவறால் கெட்டுப்போகிறவர்கள் அநேகர் உண்டு. ஒழுங்கின்மையால் அப்படியே கேடு விளையும்.

19. நூலறிவு :—பல நூல்களை நன்கு கற்பதனால் வரும் அறிவை ஒரு வாரத்திலாவது, ஒரு மாசத்திலாவது, ஒரு வருஷத்திலாவது அடைந்துவிட முடியாது. அவ்வறிவை அடைவதற்கு நன்றாய் உழைக்கவேண்டும். பலகால் சிந்தித்து ஐயம் திரிபின்றித் தெளிய வேண்டும். அப்படிச் செய்பவனுக்கு அவன் அறிவு இயற்கை அறிவுபோல் அத்தனை தெளிவும் நிஜரூபமாகும். அறிவு முதலில் ஆழ்ந்து, அப்புறம் அகலமாகவேண்டும். கற்கும் எந்நூலையும் நன்றாய்க் கற்கவேண்டும்.

T. S. குழந்தைவேல் முதலியார்.

## தான் எதிலும் அகப்பட்டுக் கொள்ளாதபடி தப்பித்துக் கொள்ள முயலுகை.

தூங்குகிறவனைத் தட்டி எழுப்பினால் கொடுத்த கடனை அவன் கேட்பானென்று அவனை எழுப்பாமலே ஒருவன் மெதுவாக நழுவி விட்டானும். அதுபோல, ஒருவனுக்காக ஒரு வேலைக்குச் சிபாரிசு செய்யத் தாங்கள் முயன்றால், மேலதிகாரியின் மனதில் தங்களைப் பற்றி ஏதேனும் அதிருப்தியான எண்ணம் தோன்றக் கூடுமென்று உத்தியோக பதவியி லுள்ளோரிற் சிலர் மௌனமாய் விடுகின்றனர். இவ்விதமே, குடும்பத்தில் ஒருவன் அநியாயமாய்த் தாக்கப்பட்டது தனக்குத் தெரிந்திருந்தாலும், அதில் குடும்பத்தலைவரும் சம்பந்தப் பட்டிருப்பதால், அதைப்பற்றித் தான் அவரிடம்போய் உள்ள நியாயத்தைச் சொல்லி வாதாடப் பார்ப்பது தன்மீது ஒரு சமயம் பிரீதிக் குறைவுக்கு இடமேற்படுவதாகி விடலா மென்று மௌனமாய் ஜாடையாக இருந்து விடுவோரும் சிலர் உண்டு. இத்தகையோர் இந்த நாளில் மட்டுமல்ல; பழைய நாளிலும் உண்டு. பாஞ்சாலியைச் சபையில் மானபங்கம் செய்வது பெரிய அக்கிரம மென்று அனைவருக்கும் தெரியும். அவளுக்காகப் பரிந்து பேசித் துரியோதனின் மனவருத்தத்தைச் சம்பாதித்துக் கொள்வானேன் என்று பல பெரியோர்களும் அவரவர்கள் பாட்டில் மௌனமாய் இருந்து விட்டனரன்றோ?




# மறுமணமோ—முதல் மணமோ?

(55-ம் பக்கத் தொடர்ச்சி.)



“சாமான்யர்கள் சகஜமாக அனுபவிக்கும் சுதந்திரங்கூட எனக்கு இல்லையா? என் இறைவா! ஸம்பூரணமான லாவண்யமும், விசாலஹிருதயமும், கலாஞானமும் என்னில் தோற்றச்செய்து இயற்கையின் சுவையை நன்கு கண்டு ருசித்து வாரி வாரி யுண்பதற்கான பக்குவத்தினளாக்கிவிட்டுக் கடைசியில் ஒரு கிழப்புலிக்கோ என்னை இரையாகச் செய்வித்தாய்? அக்ஷரஞானமேயில்லாமல் மிருக ஸமானராய் வாழும் மடவார் பலர் தமது பருவத்திற்கேற்ற நாயகர்களைப் பெற்றுப் பரிமளத்துடன் இருக்க, எல்லா முணர்ந்து—எல்லாம் கற்ற நான் இப்புன்கதிக்குப் போவதோ? ஈசா! இதுவோ நின்னருள்! ஐயோ! என் கண்ணன் என் அருகில் இல்லையே! என்னைப் பெற்றோரே எனக்கு எமனாக முடிந்தனர். இந்தக் கிழ நாற்றத்தினிடம் நான் என்ன காதல் மொழிகள் உரையாடுவதோ? ஜமீன்தாராம், ஏராளமான ஐசுவரியமாம், எல்லாம் எனக்கே சொந்தமாய் விடுமாம்; என்னுடையதே ஆகிவிடினும் அதனால் எனக்கென்ன பயனோ உணர்கிலேன். யான் விரும்புவது பணமன்று; மஞ்சள் குங்குமமே—மங்களமே—மனமொத்த காதலே. இதழ்ச்சுவை பருகுதல் என்கின்றார். அது எவ்விதமிருக்குமோ?—இந்தக் கிழப்புலியிடம் அந்த சுவை காண்பதினும் அய்யோ! இறத்தலே நலம். “புருஷ சுகம்” எனப் பூவையர் பூரிப்புடன் போற்றும் புனிதமான இன்பம் எனக்கு இந்த ஜென்மத்தில் இல்லையா?—அந்த இன்ப நலமின்றி மற்றெந்த இன்பம் துணை கூடினும் பயன் என்னும்?—இயற்கையின் அவஸ்தைகளில் ரதி சுகாநுபவம் மிக்க வலிமை பொருந்தியதென்பார். எத்தகையோரும் அதன் வசப்பட்டு மயங்கி விடுவாரெனில், என் போன்ற சிறுமியர், பேதையர் தம்மை யடக்கித் தணித்து வாழ்தல் யாங்ஙனமோ?—அன்றியும் கலாவிற்பன்னரா யுள்ளோர்க்கோகாமசாஸ்திரத்தின் ஒவ்வொரு பகுதியும் அணுவும் நன்குதெரிந்துமற்றவரினும் மிதமிஞ்சிய ஆவல் அதிகரித்திருக்கும்;—எதையும் விவரம் தெரிந்து அனுபவிக்கும் நுட்பம் கற்றவர்தம் இயற்கை. அவ்வகையில் நான் இங்கு அனுபவிக்க எந்தஇன்பம் இருக்கின்றதோ?—கிழ நாற்றம்தான் இருக்கின்றது! பக்குவமான மாங்கனியுடன் அழுகிய மாங்கனியை வைப்பதில்லை; அதைத்

---

எந்தக்கலகமும் சச்சரவும் எதிர்ப்பும் எல்லாம் நமது நன்மைக்கே. அது முதல் நாம் நல்ல புத்தி கற்றுக்கொண்டு பிறருடைய குணங்களை அறியவும் தக்கசமயம் வாய்த்துப் போதுமான எச்சரிக்கை பெறவும் வசதி உண்டாகிறது.

தூரத்தே எறிந்து விடுவர்; அந்த அறிவுகூட, அந்த இரக்கம் கூட என் பெற்றோர் என்னிடம் காட்டவில்லையே ;—தெய்வமே! இத்துயரத்திற்கு விடிவு நாளும் உண்டா?" என்று ஜானகி பிரலாபித்தவாறு இருந்தாள்.

ஃ

கடைசியில் என்ன? ஜானகி எவ்வளவோ வேண்டியும் பெற்றோர் மனம் இளகவில்லை. அவள் எங்கும் தப்பிப்போகாவாறு பலத்த காவலுக்கு உட்படவுமானாள். விவாக தினமும் வந்தது. படுபாவி ஜமீன்தார் மாங்கல்யத்தைக் கையிலெடுத்தார். ஜானகியின் கழுத்திலிட்டு ஒரு முடியும் போட்டார். இனி இரண்டு முடிகள் பாக்கி. அதற்குள் ஜமீன்தாரின் வலது கரம் திடீரெனப் பூமியைத் தொட்டுத் தொங்கி விட்டது; வலது காலும் தனது வலிமை யிழந்துவிட ஜமீன்தார் சாய்ந்து கீழே விழுந்தார். இந்தப் பாரிசவாய்வு அந்த ஒரு முடி போடுவதற்கு முன் வந்திருக்க வொண்ணாதா? ஜானகி தனது மணவிபத்திற்குத் தப்பியிருக்கலாமே! ஹா! விதியே! விதியே!

ஃ

ஒரு வருஷ காலமாக ஜமீன்தாருக்கு நடந்த சிகிச்சைகள் அற்பசொற்பமன்று. எத்தனை வைத்தியங்கள் செய்தினு மென்ன? ஆண்டவனின் கோபமோ யாதோ! அவர் பாரிச வாய்வினால் பாதிக்கப்பட்ட வலது கரத்தையும், வலது காலையும் தமக்குச்சொந்த மாக்கிக்கொள்ள முடியவில்லை. கண்ணனும் கலெக்டர் பரீக்ஷையில் தேறிஊருக்கு வந்து விட்டான். ஜானகியைக் கண்டு கதறினான். ஜானகியும் கதறினாள். கடைசியில் இருவரும் ஜமீன்தாருக்காகச் சேர்ந்து கதறினர். ஜமீன்தாரும் இவர்களோடு கதறினார். அவர் கதறியதற்கு என்ன கருத்தோ தெரியவில்லை. ஒருகால் தாம் ஜானகியின் வாழ்வைப் பாழ் படுத்தியதை எண்ணித்தான் கதறினாரோ என்னவோ! அவ்வளவு நல்ல புத்தி அவருக்கு உண்டாய்விட்டதா என்பது தான் பெரிய சந்தேகம்! கொலைபாதகர்களுக்குக் கூடச் சில சமயங்களில் இரக்க சிந்தையும் உத்தம நினைவுகளும் உண்டாகுமென்று உலகோர் உரைக்கின்றனர். ஏனெனில் மனிதர்களுக்கு நல்லது காண்பதே இயற்கையாகவும், தீயது இழைத்தல் புத்திக் குறைவால் நேர்ந்த செயற்கைத் தன்மையினதாகவும் இருப்பதாய் இயற்கை அறிவு நூல் வல்லோர் இயம்புவர். ஒருவன் கொலைஞனா யிருப்பினுங்கூட தான் ஈன்ற குழந்தையைக் காணுஞ்சமயம் அதனிடத்து நிஷ்களங்கமான பிரேமையைச் செலுத்துவா னென்பது உறுதி; செலுத்தவும் கண்டிருக்கின்றோம். அத்தகைய இரக்கம் ஒருகால் ஜானகியின் மீது ஜமீன்தாருக்கு உண்டாகி அதனாற்றான் கதறினரோ யாதோ?—தெய்வமே அறியும்.

ஃ

கண்ணனும் ஜானகியும் ஒருவருக்கொருவர் பேசியபடி யிருந்தனர். பக்கத்தில் ஜமீன்தார் கண்களை மூடியவாறு கிடந்தார். அவர் நித்திரை புரிவதாக இவர்களுக்கு எண்ணம். அவரோ விழித்த நிலையில் கண்களை மட்டும் மூடியவராய் இவர்கள் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் செவியுற்றவாறு இருந்தார். ஜானகி தன் மனோவுறுதியைக் கண்ணனிடம் தெரிவித்தாள். கண்ணனும் அவளது

---

வெளியில் சிரிப்பாகவே பேசி விடைபெற்று ஊர் போனதும் எந்தக் காரியமுமே செய்யாமல் மௌனமாய் விடுவது சிலரது போக்காம்.

நற்குணத்தைத் துதித்து அவளது கமலமலர்க் கரத்தை யெடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான். ஜானகி தெரிவித்ததாவது :—கல்லாஞலும் கணவன், புல்லாஞலும் புருஷன்; என்னை அவர் மனைவியாக்கிக் கொண்டார். இப்போது நான் அவருக்குச் சொந்தம். ஒரு உத்தம பத்தினியாக நான் இருந்து அவரது பணிவிடைகள் யாவற்றையும் புரிந்து அவ்வகையிலேனும் அவரது ஆத்மாவுக்கு ஒரு திருப்தியை உண்டாக்க வேண்டுமென்பதே என் முடிவு. இதற்குமேல் எனக்கு வேறு எந்த ஆசையும் இல்லை. எத்தனையோ காம சிந்தனைகள் என் நெஞ்சில் ஊற்றெடுத்துப் பெருகியிருக்கலாம். அவற்றை யெல்லாம் என் கலாவிற்பன்ன சக்தியைக் கொண்டு அடக்கி, அலையும் மனத்தை ஒரு எல்லையினில் நிறுத்தி, என்னை மாலையிட்ட மணாளரிடத்துத் தானே செல்லுமாறு செய்து சரிப்படுத்தி விட்டேன். நான் இதுகாலை இல்லறத்தி விருந்தவாறே துறவற நிலையினளாகி ஒரு நற்குணப் பெண்டீர் செய்யத்தகுங் கடமை யெதுவோ அதனை மேற்கொண்டவளாய் உறுதியான உள்ளத்துடன் உள்ளேன். என் மணாளரே இவ்வுலகில் என் பெரிய சொத்து'' என்று ஜானகி தன் மனோ நிச்சயத்தைக் கண்ணனிடம் உரைத்தாள். கண்ணனும் அவளது திடசித்தத்தைப் பாராட்டிப் போற்றினான். ஜமீன்தார் இவற்றை யெல்லாம் செவி குளிரக் கேட்டவாறிருந்துதாம்,இனிச் செய்வ தென்ன வென்பதைப் பற்றி யோசித்தபடியே தமது அகக்கண்களையும் மூடி நித்திரை போவதானார். ஜானகியும் கண்ணனும் ஜமீன்தாருக்கு இரு கண்கள் போன்றிருந்து தம்மாலான உபசாரங்கள் அனைத்தையும் செய்துவந்தனர். ஆயினுமென்ன? குணம் காணவில்லை. வைத்தியர்களும் கைவிட்டனர்; அமாவாசைக்குள் ஜமீன்தார் முடிந்து விடுவாரென்றுங் கூறி விட்டனர்.

ஃ

பௌர்ணமி தினம், நடுநிசி, எங்கும் நிசப்தம்; சந்திரன் தனிக்காட்டு இராஜாவாக அரசு செலுத்தினான். ஜமீன்தாருக்கு அன்று மனம் பலவாறு சென்று இறுதியில் ஒருவாறு முடிவுக்குவந்து ஒழுங்கு பட்டிருந்தது. அவர் தன் கட்டிலை வெளி முற்றத்திற்குக் கொண்டு போகும்படி கட்டளை யிட்டார். கண்ணனும் ஜானகியும் எவ்வளவு மறுத்துக் கூறியும் அவர் இணங்கவில்லை. நிலவினில் படுத்துக் கொண்டு அவர் கண்ணனையும் ஜானகியையும் அழைத்து அருகில் நிற்கச் செய்து பின்வருமாறு கூறலானார்:—
"கண்ணா! ஜானகி! நான் இவ்வுலகை விட்டு நீங்க வேண்டிய காலம் வந்து விட்டது என்பதை உணருகிறேன். மற்ற எத்தனையோ மனிதர்களைப் போலவே, நானும் மரணத்தருவாயிலே என் வாழ்நாளை வீணாக்கியதை எண்ணி வருந்துகிறேன். நான் கேவலம் புழுபூச்சி போலவே வாழ்ந்து வந்தேன். அவைகளும் வயிறுற உண்டு உறங்குவ தில்லையா? என் இளமை, முதுமை யாவற்றையும் பயனின்றிக் கழித்தேன். ஏதோ தெய்வத்தினருளால் செல்வக் குடும்பத்தில் பிறந்தது என்னை ஏமாற்றி விட்டது. ஆனல் கடவுள் என்மீது கருணை கொண்டு உங்களிருவரையும் என்னிடம் அனுப்பி எனக்குப் புத்தி யுண்டாகும்படி செய்தார். அவரை நான்

---

தன்மீது அன்பு வைத்தவர்களிடம் தான் அன்பு கொள்வதில்லை. தன் மீது அலக்ஷியமாய் பராமுகமாய் இருப்போரிடமே தான் அன்புகொண்டு அலைந்தும் நோவதுமாகிறார்கள்.

மனமாறத் துதிக்கிறேன். கண்ணனிடம் எனக்கு இயற்கையாகவே ஆழ்ந்த அன்பு உண்டாயிற்று. அதற்குக் காரணம் நான் அறிய மாட்டேன். அவனுடைய மாசற்ற தன்மையும், புத்தி கூர்மையும், களங்கமற்ற மனதும் எனக்குப் பல நீதிகளைச் சொல்லாமற் சொல்லிவிளக்கின. அவன் என்னிடம் வந்தது முதற்கொண்டு நான் புதிய வாழ் வொன்றைத் தொடங்கினேன் எனலாம். அதன்பிறகு ஜானகிஎன்னிடம் வந்து கண்ணன் தொடங்கிய வேலையைப் பூர்த்தி செய்வித்தாள். நான் கேட்பார் பேச்சைக் கேட்டு அவளைத் தொட்டுத் தாலி கட்டியது உண்மை தான். ஆனால், தெய்விக இயற்கை நிறைந்த அவளுக்கு அன்று மனம் நிறைவேறவில்லை என்று உறுதி கூறுவேன். மணச்சடங்கு நடக்கும் பொழுதெல்லாம் அவள் அதனை வெறுத்தவளாய்ப் பிரலாபத்துடன் கதறியவாறு கிடந்தாளேயன்றி என்னை ஒரு இனிய மணாளனாகவும், காதலனாகவும், தன் தலைவனாகவும் எற்கும் சிந்தனை யேதும் கொண்டாளில்லை. விவாகதினத்தன்று பாரிச வாய்வால் விழுந்துவிட்ட என் வலதுகையும் காலும் இன்றுவரை குணம் பெறவில்லை. இவ் வருஷ முழுவதும் ஜானகி எனக்குச் செய்த உதவியை நான் எவ்வாறுபுகழ்வது? விதிவசத்தால் தான் மணந்த பர்த்தாவைத் தெய்வம் போன்று கருதிக் கற்புடனும் நடந்தாள். இரவெல்லாம் கண்விழித்து என்னைக் காத்து நின்றாள். அவளது மனப் பரிசுத்தத்தைக் கண்டு நடுங்கி நின்றேன். விவாகத்திற்கு முன்பு என்னைப் பழித்தது உண்மை. திருமணம் நிறைவேறிய பின்னரோ இவ்வளவே தனக்குப் பிராப்தம் என்ற திடசித்தையானாள். அவள் எனக்குச் சொந்தப் புத்திரியென்றே அன்று முதல் இன்றளவும் என்னுள்ளத்தில்கருதி வருகின்றேன். அவளுடைய தூய தன்மையை நான் இவ்வருஷம் முழுவதும் கண்டு தெரிந்து கொண்டேன். அவள் தவறி தப்பித் மனிததேக மெடுத்த தெய்வப் பெண்ணே யாவாள். அவளுக்கும் எனக்கும் வெகுதூரம். ஜானகிக்கு உண்மையாக மணம் நடக்கவில்லை என்பதே என் உறுதி. என் அந்திய காலத்தில் எனக்கு நற்புத்தியளித்துக் காப்பாற்றும் நோக்கத்துடனே தான் கடவுள் அவளை என்னிடம் அனுப்பினர். என் மனம் சாந்தமடைந்துள்ளது. என் உள்ளம் பூரிப்பினால் நிறைந்திருக்கிறது. நான் இவ்வுலகைவிட்டு நீங்குவதற்கு முன் என் கடைசிக் காரியத்தைச் செய்ய வேண்டும். இதோ! இவ்வானத்தினடியில், மனித சஞ்சாரமற்ற நடுநிசியில், சந்திரனொளியில் நான் உங்களிருவரையும் ஒன்று சேர்த்து மணஞ் செய்விக்கிறேன்! மனித சமூகம் ஜானகி மறுமணம் செய்து கொண்டாள் என்று எவ்வளவோ தூற்றும்தான். மறுமணம் என்பது பொய். இதுவே அவளது முதல் மணம். மேலும் கண்ணனுக்கும் ஜானகிக்கும் நடக்கும் விவாகம் கேவலம் சரீரத்துடன் நின்றுவிடுவதல்ல. அது ஒரே தன்மையையுடைய இரு மனங்களின் மணம்; ஒரே இயல்புடைய இரு ஜீவர்களின் கூட்டு; ஆழ்ந்த இரு புத்திகளின் சேர்ப்பு; ஒரே செடியில் மலர்ந்த வெவ்வேறான இரு மலர்களைப்போல நீங்கள் வாழ்வீர்களாக. ஜானகி! உனது 'கணவன்' என்று உலகத்தாரால் கூறப்படும் நான் இவ்வுலகினின்றும் மறையும் தருணத்தில் உனது உண்மை நாதனுடன் உன்னைச்

படித்தாய்விட்டது சரி. அதிர்ஷ்டமிருந்தால் டிப்டிகலெக்டராகலாம். அதிர்ஷ்டமில்லாவிடில் குமாஸ்தாவாகவே கிடந்து அழும்படி நேரலாம்.

சேர்ப்பித்து விட்டேன். கடவுள் உங்களைக் காப்பாராக" என்று உரைத்துக் கண்ணன்—ஜானகி இருவரது கரங்களையும் சேர்த்து வைத்து ஜமீன்தார் ஆநந்தம் நிறைந்தவரானார்.

ஃ

மறுதினம் ஜமீன்தாரது அழைப்புக்கிணங்கி அவ்வூாரனைவரும் வந்திருந்தனர். ஜமீன்தார் தமது ஸ்வீகாரபுத்திரனாகக் கண்ணனை ஏற்றுக் கொண்டு, தமக்குப் பிறகு தமது ஸர்வ சொத்துக்களும் கண்ணனுக்கும் ஜானகிக்குமே சேரும்படி அதற்குள்ள சட்ட சம்பந்தமான ஏற்பாடுகளையும் நிறைவேற்றினார். ஜானகியைத் தாம் சொந்த புத்திரியாகவே கருதி வந்திருப்பதாயும், அவளுக்கு நடந்த விவாகம் விவாகமே யல்ல வென்றும் ஜானகியைக் கண்ணன் மணந்து இல்லறம் நடத்த வேண்டு மென்பதே தமது அபீஷ்ட மென்றும் கூறி, எல்லோருக்கும் முன்பாக ஜானகியின் கரங்களைக் கண்ணனின் கரத்துள் வைத்துக் கடவுளைத் துதித்தார். அங்கு வந்திருந்தோரனைவரும் இந்த நூதன ஸம்பவத்தைக் கண்டு அதிசயித்தனர். வைதீகர்களிற் பலர் இதனைப் பழித்தன ராயினும் ஜமீன்தாரின் முன்பு வாய் திறக்கக்கூடவில்லை. இன்னும் சிலர் முணு முணுத்தன ரெனினும் தங்களின் எதிர்ப்பு பயன் படாதெனக் கண்டு அடங்கி விட்டனர். மேலும், கண்ணனே அந்த ஜில்லாவின் தலைமை அதிகாரியாகவும் இருந்ததால் ஊரையிட எவருக்கும் துணிவு பிறக்கவில்லை. இந்த சம்பவம் நிகழ்ந்து ஒரு வாரமாகியும் ஊர் முற்றிலும் இதே பேச்சாக இருந்தது. வைத்தியரின் வார்த்தை பிசகாமல் ஜமீன்தாரும் அமாவாசைக்கு முதல் நாள் கடவுளின் பாத நிழல் சேர்ந்தார். கண்ணனும் ஜானகியும் அவர்மீது விழுந்து புலம்பினர். கதறினர். ஜானகி மூர்ச்சையாயினாள்.

ஃ

ஜமீன்தார் காலமான ஒரு வருஷத்திற்குப் பின் ஜானகிக்கும் கலெக்டரான ஸ்ரீமான் கண்ணனுக்கும் விவாகம் நடந்தேறியது. தம்பதிகள் இருவரும் ஆநந்தமாக இல்வாழ்க்கையை நடத்திச் சுகித்தனர். சுகித்ததின் பரிசாக ஒரு சுகுமாரனும் அன்னோரிடை தோன்றுவதானான். அடாது செய்த தன் பெற்றோரை ஜானகி கடைசிவரையும் மன்னிக்கவேயில்லை. அவர்களுடன் பேசவுமில்லை. அவர்களின் ஸம்ரக்ஷணைக்கு வேண்டிய சொத்துக்களை மட்டும் கொடுத்து அவ்வளவுடன் விலகிக் கொண்டாள். ஊராரும் இப்பொழுது ஜானகியை மதிப்புடன் போற்றுவாராயினர். காலம் எதையும் திருந்த வைத்து விடும். ஹிதம் செய்வோம். கலங்குவோரின் கண்ணீரைத் துடைத்துக் கண்ணியமாக வாழ வைப்போம். நல்லது செய்யத்துணிவு வேண்டும்—துணியவேண்டும்—துணியக்கடவோம். துணிந்தவர் கடவுள் துணை பெறுவார். அது திண்ணம்.

ஒருவன் வியாதியில் உளறினால் அங்கு பற்றுதலற்றவர்கள் அவ்வுளறுதலைப் பரிகசித்து நகைப்பர். அத்துடன் அது அவர்களுக்கு ஒரு வேடிக்கை. பற்றுதலுள்ளவனோ ஐயோ! புத்தி மாறிவிட்டதே, என்னென்னவோ உளறுகிறாரே என்று கவலையுடன் தவிப்பான். மற்றவருடன் ஒத்துச் சிரிக்க வேண்டிவரின் சிரிக்கவும் சிரிப்பான். ஆனால், இந்தச் சிரிப்புக்கும் மற்றவர் சிரிப்புக்கும் எவ்வளவோ பேதமுண்டன்றோ?

# நீதி லதா

1. நகைகளை இரவல் பெறுவதில் அதிற் பதிந்துள்ள கற்கள் விழுந்து விடின், பெரிய மனஸ்தாபமாய் பதிலுக்கு வாங்கித்தரவும் நேரும்.

2. நீ இதுவரைதெரிந்ததைவிட, இனி நீ தெரிந்து கொள்ள வேண்டியதே அதிகம்.

3. உனக்கு மரியாதை வேண்டின் உன்னிலும் கீழானோரையும் மரியாதையாக நடத்திப் பெறு.

4. உன் மதமே உனக்குச் சக்கரைக்கட்டி.

5. உன் நேசத்தால் உன் வீட்டுக்கு வந்தவன் உன் பெரியோரிடமும் பழகி, பிறகு உன் மீது கோள் சொல்லவும் துணிந்து விடுகிறான்.

6. ஒரு ரகசிய விஷயத்தை உன் வேலையாட்களை வைத்துக் கொண்டு பேசாதே. இன்று வேலையாளாகவுள்ளவனே நாளை விரோதியாகலாம். சம்பளம் தாராமல் நிறுத்தினால் எவனும் பகைவனாகலாம்.

7. ஆத்திரத்தில் எதுவும் பேசி விடாதே. சோறு சிந்தினால் எடுக்கலாம், சொல்லு சிந்தினால் எடுக்க முடியுமா ?

8. கனிவாகப் பேசுகிறார்களென்று உன் கணக்கு புஸ்தகங்களை அவர்களிடம் காட்டுவது பிறகு வியாபார நாசத்திற்கு ஹேதுகாம்.

9. கொடுப்பது இனமாக இருக்கட்டும். இரவல் தந்து எதிர்பார்ப்பதும், பிறகு அது வாராமல் நோவதும் புத்திக் குறைவான செய்கை.

10. உன் துயரங்களைச்சொல்லிக் கொள்ள ஒரு உத்தம நண்பனைப் பொறுக்கி எடு.

11. குடும்ப சச்சரவுகளைப் பிறர் செவிக்கு எட்ட விடாதே. அது கௌரவக் குறைவு. அதைக் கேட்கிற பிறர் அதை இழிவுபடுத்துவதை விட வேறு நன்மை எதும் செய்யார்.

12. அந்நிய நாட்டிலுள்ளவன் தாய்நாட்டுத் தபால்கள் வருந்தினத்தில் ஒரு மணி நேரத்திற்கு முன்பே தபாற்சாலையில் காத்திருப்பான்.

13. உன்னிலும் மேற்பட்டவர்களைக் கண்டு பொறுமைப் படுவதை விட, உன்னிலும் கீழ்ப்பட்டவர்களைக் கண்டு, அவர்களின் நிலையிலும் உன் நிலை மேலென்று மகிழ்ந்திடுக.

14. அவன் உன்னை முகஸ்துதி எதற்காகச் செய்கிறானென்று ஆலோசி. ஏதாவது உன் உதவியை விரும்பியே, எதையாவது சுருட்டிக் கொண்டு போவதற்கே இருக்கும். கொடுத்து இழந்த பின்பு ஏங்கிப் பயனில்லை.

15. நாம் பிரியம் கொண்டு நேசிக்கிற நண்பன் கபடனாய் ஒப்புக்குத் தலையாட்டிக் கொண்டு வருகிறான். இது நமக்குத் தெரிய நீண்ட நாள் சென்று விடுகிறது.

16. இனிமையான வார்த்தைகளே உன்னிடத்தில் மற்றவர்கள் அன்பு கொள்ள வழி. அந்த இனிமையில் கபட நஞ்சு வேண்டாம்.

17. தெருவில் நடக்கும் கலகங்களில் நீ கலந்தால், பிறகு கோர்ட்டில் நீயும் ஒரு சாக்ஷி சொல்ல நேர்ந்து உன் வேலைகளும் கெடும். இரண்டு நண்பர்களில் ஒருவனை இழக்கவும் வரும்.

18. உனக்குக் கீழ் வேலை செய்பவர்களிடம் அனுவசியமாய்ப்பேசாதே அது உன்னை அவர்களுக்குச் சரி சமமாகச் செய்து விடுவதுடன், உன் மீதுள்ள மதிப்பும் குறைந்து அலக்ஷியமாய்ப் போகவும் வைத்துவிடும்.

C. V. N. நாராயணன் செட்டியார்.

# அனுபவ மணிகள்

1. பெரிய மனிதர்கள்தான்; ஆனால், அவர்களின் பேச்சு புளுகு மூட்டையென்று—அதை நம்பி ஏமாறிய பிறகே தெரிகிறது.

2. தன் மாமி வீட்டு ரகசியங்களை வெளியில் சொல்லி மற்றவரோடு தானும் நகைக்கிறாள். தன் தாய்வீட்டு விஷயங்களைப் பிறர் தாழ்த்திக்கூறின் உடனே சீறி எழுகிறாள். மாமி வீடு அன்னிய வீடு என்ற எண்ணமோ?

3. சில வியாபாரிகள் முன் வாங்கிச் சென்ற புஸ்தகங்களுக்குப் பணம் கொடாமலே, பின்னும் கடனுக்கே புஸ்தகம் கேட்கிறார்கள். விற்போரின் புஸ்தகங்கள் கடனுக்கே சென்றால் எவ்விதம் வியாபாரம் நடக்கும்?

4. சில புருஷர்கள் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வரும்போதே சிடு சிடு என்று ஆபீஸில் வேலை செய்த ஆத்திரத்தைக் காட்டி மனைவி மக்களை வாட்டி விடுகிறார்கள். இவர்களின் உத்தியோகம் தொலைந்தால் ஒரு சமயம் சாதுவாகலாம்.

5. பத்து பவுனுக்கு ஒரு நகையைச் செய்து விட்டு பதினைந்து பவுன் என்றுபுளுகுகிறது. அதே நகையை ஆபத்தான சமயத்தில் அடகு வைக்க வரும்போது வண்டவாளம் வெளியாகி விடுகிறது.

6. பெண்ணைக் கொடுத்த இடத்தில் எத்தனை செய்தாலும் பொல்லாப்பான பெயர் தான். சொட்டுச் சொல்லுதான். பணச் செலவோ ஏராளம். பெயர் உண்டா? இல்லை. கடைசியில்நிற்பது மனஸ்தாபம்தான்.

7. வேறு ஜீவேஜி கிடையாது. மாதச் சம்பளம் பதினைந்தே ரூபாய். மனைவியின் மீது ஆயிரக்கணக்கில் நகை. உடுக்கும் செலவுகளும் தடபுடல்தான். உண்ணுவதும் அப்படியே. வீடும் சொந்தமே. எப்படிப் பதினைந்து ரூபாயில் இவ்வளவு செலவும் நடக்கிறதோ?—கடவுளே அறிவார்.

8. நான்கு வருஷங்களுக்கு முன் பார்த்தபோது தேக முற்றும் சிமைக் கமலமயமாக இருந்தது. இப்போதோ ஒரு மூக்குத்தியே எஞ்சி நிற்கிறது. காரணமென்ன? வீட்டுக்காரன் வேசிநேசன் ஆனதே.

9. என் மூத்த மனைவியுடன் என் வாழ்வு முடிந்ததென்று பலர் புலம்ப, அதே மூத்த மனைவியுடன் வாழ்பவர்களோ தங்கள் மனைவியை வாட்டி ஹிம்ஸிக்கிறார்கள்.

10. பெண்பிள்ளைகள் கூட்டம் போட்டுப் பேசினால் அதில் வம்புதான் இருக்குமாம். ஆண்பிள்ளைகளின் கூட்டத்திலோ சுயநலம் இருக்கும் போலும்!

11. தன் மாமி வீட்டின் பாடுகள் தன் பிரஸவம் கஷ்டங்கள் முதலியவற்றை ஒரு பெண் சொல்லத் தொடங்க, மற்ற பெண்களும் அதைத் தொடர்ந்து தங்களின் அனுபவங்களையும் பேச ஆரம்பிக்கிறார்கள், இவ்விதமே தேச சேவையிலும் பேச்சுகள் ஆரம்பித்தால் எவ்வளவு திவ்யமாக யிருக்கும்?

12. நான் எவ்வளவு கஷ்டம் அனுபவித்தாலும் என் தங்கையைக் கைவிட மாட்டேன் என்று சொன்னதும் ஒரு காலம், அதே தங்கை பிரஸவச் செலவுக்குப் பணமும் இடமும் கேட்க அதற்கு மறுத்து இப்போது அன்னியனானதும் ஒரு காலம்!

13. இறக்கும் தறுவாயிலுள்ளவளைப் பழய பகையை மறந்து பார்க்கச் சென்றால், படுத்துள்ள ஆசாமிக்கோ ஸ்மரணையில்லை. அங்குள்ள உறவினரோ பழய ஆத்திரத்தை அப்போதும் மறவாமல் வந்தவர்களுடன் பேசாதிருந்துவிடுகிறார்கள். அங்கு சென்றவர்களின் கதியோ—

திக்கம் தீரப் புலம்பி விட்டுத் திரும்ப நேருகின்றது.

14. கைராசி என்பது ஒரு தனித்தசங்கதி. சிலருக்கு எந்த வியாபாரத்தைத் தொட்டாலும் விருத்தியாகி விடுகிறது. கைராசியுள்ள வைத்தியன் மருந்து கொடுத்தால் உடனேகுணம்.

மூ. வை. கோதைநாயகி அம்மாள்.

## ஆத்ம சாந்தி உண்டா?

இந்த உலகைச் சற்றே உற்று நோக்கிப் பார். ஞான விஷயங்களிலும் சாஸ்திர விஷயங்களிலும் மனிதன் பல்லாயிரம் சங்கதிகளைக் கண்டுபிடித்திருக்கிறான். அவை மனிதனுக்கு மண்ணின் மீதுள்ள அளவு கடந்த ஆவலைக் குறிப்பிக்கும். இதனால் மனிதனுக்கு இன்பமாகிய ஆத்ம சாந்தி மேலிட் டிருக்கிறதா?—அல்லது துன்பமாகிய ஆசை அலைச்சல்கள் மேலிட்டிருக் கின்றனவா? எது மேலிட்டிருக்கிற தென்று நீயே யோசித்துப் பார். ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் இருந்த நிலைக்கும், இப்போது உள்ள உலகின் நிலைக்கும்—இரண்டையும் ஒத்திடும்பொழுது உலகில் சிரிப்பொலியாகிய ஆத்ம சாந்தி காதில் ஜாஸ்தி விழுகிறதா? அல்லது அழுகைக் கண்ணீரான தரித்திர தாண்டவத்தின் சத்தம் காதில் ஜாஸ்தி விழுகிறதா? ஐரோப்பாவில் பைசாச அபிநயமான நாகரீகம் மிக்க விபரீதமான முடிவைப் பெற்றுக் கொண்டிருக்கின்றது. ஆனால் அதனால் கண்டது என்ன?—மனிதன் கைக்கெட்டாதவற்றை எட்டும்படி செய்து கொண்டே செல்லுகின்றான். நடை பெறாதவைகளை நடை பெறும்படி செய்து கொண்டு போகிறான். இவை இரண்டுமே மனிதனுக்குப் பெரிய வேலை;—அது அவனுடைய ஆழஉள்ளத்து அறிவின்வேலை. இந்த அறிவின் பயனாக அமைதியுற்று ஆத்ம சாந்தி கொண்டு விட்டனனா என்பது வினா? அதைத்தான் காண முடியவில்லை. நிர்வாணமாய் மிலேச்ச நிலையிலே பழங்காலந் தன்னில் மானிடன் திரிந்ததுண்டு. அந்த மிலேச்ச நிலையிலுங்கூட ஒருவித ஆத்ம சாந்தியை அவன் கொண்டிருக்கவும் கூடும். ஆனால், இன்றைய மேற்றிசை உலகில் நிர்வாணமாய் உலாவுதற்குப் பகிரங்கப்பிரவேசமாய் நடக்கும் ஓயாத முயற்சிகளிலே—அரை நிர்வாணங்களிலே—ஆத்ம சாந்தியின் ஒளி காணக்கிடைக்குமா? ஆத்ம சாந்தியற்ற—உள்ளத்தின்சமாதானமற்றவாழ்க்கையும் ஒருவாழ்க்கையா?

# விகட மூதுரை

1

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால், அதனைப் பின்
என்றும் சிறிதும் எண்ணாராய்—வன்துயரம்
மிக்கெய்த சூழ்வினைகள் விளைவித்துப் புண்செய்வார்
இக்காலத் தினில் எங்குமே.

2

நல்லார் ஒருவர்க்கு நயந்துதரும் பணிகாரம்
இல்லத்து உறைவார்கட் (கு) ஈதலே—அல்லால்
நாம் விழைந்த நல்லார் நல்வயிற்றில் செல்வதொரு
தீஞ்சுவைச் சிறுதுணுக்குத் தான்.

3

இன்ன இளமை வறுமை வந்தெய்தியக்கால்
சின்ன திருஓமே திருநீறும்—மன்ன
கவலையற்றுத் தலைசிரைத்துக் காவிவுடுத்துத்திரியில்
உவகையொடு சோறு உண்ணலாம்.

4

அட்டாலும் பால் இடையன் அளித்த வெண்ணீரே
நட்டாலும் பணமின்றேல் நண்பல்லர்--கேட்டாலும்
பட்டைச் சாராயத்தில் பாசம் கொண்டேநிற்பர்
சுட்டிடுவோர் சங்கு தோளில்

5

அடுத்து முயன்றால் அப்பெண்ணை எவ்விதமும்
முடித்து விடலாம் மொழி மணமே—நடிப்பால்
அயல் நாடு சென்று ஆனேன் செல்வனென
மயக்கில் மணம் உறுதியே.

---

என் செய்துகொடுக்க என்று மனமற்றிருப்போரிடம் எந்தச் சிறு வேலையைச் செய்யக்கொடுத்தாலும் அதிற் பல குறைகளை வைத்துப் பாதி வேலையாகப் போட்டுவிட்டுத் தொலைகிறார்கள். பிறகு என் அவர்களிடம் அவ் வேலையைக் கொடுத்தோமென்று நாம் மனம் நொந்துகொள்ள வருகிறது.

6

உற்ற இடத்தில் உணவுகோண்டு அவ்விடத்தில்
நிற்கும்வரை பல்லிளித்து நேர்படுவோர்—சோற்கிணங்க
உடன் தலையசைத்துத் தம் ஊர் புறப்பட்டு
விடலே பிழைக்கும் விதம்.

7

நீரழவே உம் மனைவி நீர்கலங்கியே அழுவள்
பேரல்லல் வீட்டினில் பேசாதே—தீரும்வரை
மீறுந் துயரனைத்தும் விலகப் பச்சைப் பல்லக்(கு)
ஏறுவதே ஏற்ற திறம்.

(தொடரும்.)

ஆரியூர் – வ. பத்மநாப பிள்ளை.

## முன்பு நேசம்—இன்று பகையா ?

அந்த நாளில் பந்துக்களாக நினைத்து விட்டு, இந்த நாளில் அன்னியர்களாக எண்ணுவது சரியா? நேற்று நேசித்தவர்களுடன் இன்று சச்சர விட்டுக் கொள்வதா? நேற்று அவர்கள் பக்கமாக இருந்து மற்றவர்களை எதிர்த்து விட்டு, இன்று மற்றவர்கள் பக்கமிருந்து கொண்டு, நேற்று சேர்ந்திருந்தவர்களோடு எதிர்ப்பதா? ஒருவனுக்கு அனுகூலமாக எவ்வளவோ செய்து விட்டு, இன்று பொறாமையுடன் அவன் விருத்தியைக்கண்டு வயிறு எரிவதா? நேற்று கனத்த விருந்து நடத்திவிட்டு இன்று தாகத்திற்கு ஜலமும் தாராமல் துரத்துவதா? நேற்று ஏழையா யிருந்தபோது பிரீதித்தவர்களை இன்று செல்வவானானதும் அவர்களை இதற்குமுன் கண்டிராதவர்கள் போல் நடப்பதா? நேரில் சிடுசிடு—காகிதத்திலே மரியாதையா? இவ்விதம் வேளைக்கு ஒரு விதமாக மாறுவது சரியா? தவறு செய்வது மனித சுபாவமே. தவறிய பொழுதெல்லாம் அந்தத் தவறை யுணர்ந்து திருத்திக் கொள்வதே பெரும்புகழாம்.

பிறருடைய வேலை எவ்வளவு அவசரமாயிருப்பினும் தங்களுடைய வேலைகளையே முந்திக் கவனித்துக்கொள்வது சிலருடைய சுயநல சுபாவம்.

உயிர்வர்க்க

# சுகாதார விதிகள்.

(ஸ்ரீமான் கா. ஸ்ரீனிவாஸன்.)

அ. அரிதரிது மானிடராதலரிது ;

ஆ. ஆகவே, நோயணுகாவண்ணம் நம்

இ. இருப்பிடமாகிய வீட்டைப் பழுதின்றி நன்கு காப்பாற்றுவதற்காக,

ஈ. ஈ, கொசு, பேன், பூச்சி, புழுக்களை எல்லாம் அறவே ஒழித்து சுத்தமாக்கி,

உ. உணவைப் புதியதாய்ச் சமைத்துச் சுடுகையோடும் பசியாறப் புசித்து,

ஊ. ஊற்று நீரை நன்கு காய்ச்சிப் பருகி,

எ. எலி, பாம்பு, நாய், பூனை முதலியவைகளை வீட்டிற்கப்பால் துரத்திவிட்டு,

ஏ. ஏராளமாய் நல்ல காற்றை மகிழ்வாக உட்கொண்டு நிர்மல உள்ளமாய்

ஐ. ஐயனைத்தொழுது, தேகமும் உடைகளும் அழுக்கின்றி சுத்தமாய் இலங்க,

ஒ. ஒவ்வொரு நாளும் சூரியனொளியிலே

ஓ. ஓடி, ஆடி உன் வேலைகளைச் செய்து

ஔ. ஔவைபோல் கல்வியும் நீண்ட ஆயுளும் பெற சுகவிதிகளை யறிந்து நட.

(From the Health Department, Madras Corporation.)

# சிறுமணித்திரள்

(" பன்னிரு மரகதங்களின் மர்மம் " என்ற நாவலினின்றும் திரட்டியது.)

(20-ம்-பக்கத் தொடர்ச்சி.)

829. பரஸ்பரம் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு, நேருக்கு நேராக மனம் பிடித்துப் போய் ஒன்றாய்க் கூடிப் பொருந்திக் கொள்ளுகிற சிநேகம் உறுதியானதாகும். (190)

830. ஒருவரை யொருவர் காணாமலே வெகு வெகு தூரமான இடங்களில் இருந்து கொண்டு கடிதங்கள் மூலம் சிநேகிதராகிப் பல நூறு பக்கங்களிலே நேசத்தைப்பற்றி விஸ்தாரமாய் எழுதிக் கொண்டு குதூகலித்தவர்கள், பிறகு ஒரு காலம் ஒருவரை யொருவர் நேரில் காணும்படியாய் நேர்கிற சந்தர்ப்பத்தில், ஒருவர் முகம் ஒருவர்க்குப் பிடிக்காமல், ஒருவரின் போக்கு ஒருவருக்கு ஒத்துக் கொள்ளாமல் அது முதற் கொண்டே பிரிந்து போனவர்கள் வெகுபேர் இருக்கிறார்கள். (190)

831. சிநேகம் இன்ன சந்தர்ப்பத்தில் இன்ன விதமாகத்தான் ஏற்படுமென்று ஒரு முடிவு கட்டிச் சொல்லுதல்எவராலும் சாத்தியமல்ல. (190)

832. சிநேகத்தை இழந்து போவதைவிட துரதிர்ஷ்டமானதும், வருத்த முண்டாக்கத் தக்கதுமான விஷயம் வேறொன்று இருக்கப் போவதில்லை. (191)

833. மற்றவர்களிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்வது கூட அவ்வளவு பாதகமன்று. முக்கியமாய் நண்பர்களிடத்தில் இந்தத் தொழிலைச் செய்வதைவிட அபாயகரமானது வேறொன்று மில்லை. (192)

834. ஒருவரை யொருவர் நம்பியிருந்த நம்பிக்கை முறிந்து போகும் போது அந்த ஆத்திரக் கொதிப்பில் என்ன சம்பவிக்குமோ சொல்வதற்கில்லை. (195)

835. எவன் வாயைக் கட்டாமல் தனக்குத் தோன்றியபடி பேசத்துணிகிறானோ அவன் ஒருபோதும் எந்த சிநேகிதத்திலும் நீடித்திருக்க மாட்டான். (196)

836. நாலுபேர் கூட்டங் கூடியிருக்கும்போது பரிகாசமாயும், குசோத்தியமாயும், தூஷணமாயும், அலக்ஷியமாயும், அடக்கியாளுகிற தன்மையாயும் வார்த்தைசொல்லுகிற சுபாவமுள்ளவன் ஒருநாளும் நமக்கு ஒத்த சிநேகிதனாக மாட்டான். (196)

837. எந்தச் சங்கதி நேர்ந்தாலும் ஒருவர்க்கு ஒருவர் கபடம் விட்டு நேராய் பேசித் தீர்மானம் செய்து விடுவதே நல்லது. (197)

838. எவ்வளவு உயிரோடு ஒத்த சிநேகிதர்களாயிருந்தாலும் சரிதான். அவனுக்கும் மறைக்க வேண்டிய சங்கதிகள் இருக்கவேசெய்யும். (199)

---

சிலர் எவ்வளவு கடிதங்கள் எழுதினாலும் தங்களின் பழைய நட்பையும் வாஞ்சையையும் மறுபடி காட்ட மனமில்லாமலே மாறிவிடுகிறார்கள்.

839. நாம் வாலிபராய் ஒன்றும் நாகரீகம் தெரியாமல் விளையாடிக் கொண்டிருக்கும்போது நம்மோடு பழகிய சில பூர்வீக நேசர்கள், பின்பு நாம் எவ்வளவு உயர்ந்த ஸ்திதிக்கு வந்தாலும் சிறிதும் கனப்படுத்தார்கள். (205)

840. பொல்லாத, பொறாமைப் பட்ட பழைய நேசர்கள்தான் அதிகம். (212)

841. நட்பு என்பதே அடிக்கடி பழகினால்தான் நிலைத்திருக்கும். (227)

842. படித்த மனிதன் வெளியில் பேசும் பொழுது எல்லோருக்கும் பிரியமாகப் பேசுவான். தன் உண்மை எண்ணத்தைக் கொஞ்சமாகிலும் பிறர் அறிய இடங்கொடான். தன் காரியங்களையும் முடிவில் நிறைவேற்றிக் கொள்வான். யாவருக்கும் நல்லவனாகவும் ஆவான். (229)

843. ஒரு குறித்த காரணத்தைக் கொண்டு நட்பு கொள்பவரின் நட்பு நிலையற்றது. (231)

844. சிநேகம் மற்ற யாவற்றையும் வென்றுவிடக்கூடிய வன்மைபெற்றதல்லவா? (230)

845. படிப்பு, உபதேசம் இவை யாவும் எவனுக்குக் காமமும், புதிய யௌவனமும் தூரத்திலுள்ளவையோ அவனுக்கே பிரயோசனமாகும். (233)

846. காமதேவன் பிரவேசிக்காத இடம் கிடையாது. அஞ்ஞானம் நிறைந்த பாமரஜனங்கள்முதல் பிரம்மதேவன் வரை காமனுக்குப் பேதமேதுவும் இல்லை. யாவரையும் ஒரே மாதிரியாகத் தான் அவன் நடத்துவான். (235)

847. விஷம் சரீரத்துள் பாவுவதுபோலே மனோவியாதியும் வேகமாய்ப் பரவுகிறது. (238)

848. விவாகம் உண்மையாக நடைபெற வேண்டுமானால், முதலில் அவசியமான விஷயம் வதூவரர்கள் இருவரும் உண்மையான அன்பு கொண்டிருக்க வேண்டியதே. (241)

849. உண்மையான அன்பு உண்டான பின்பு காதலர்களைச் சேர்த்து வைப்பது கஷ்ட சாத்தியமான காரியமில்லை. (242)

850. எவராலும் எல்லாவற்றையும் வெறுத்துத் தள்ளிவிடமுடியாது. ஏதாவது ஒரு விஷயத்திலாவதுபாசம் இருந்தே தீரும். (243)

851. எப்பொழுதும் பிரம்மதேவர் தான் சிருஷ்டிக்கும் பிராணிகளை ஒழுங்காக மணந்து அழகாக ஒன்று சேர்ந்து வாழும்படி செய்வதில்லை. (243)

852. காதலிருவர் மணம் செய்து கொண்டும், உள்ளன்பு பூராவும் வளர்ச்சி பெறாமல் வாழ்வதைக் காட்டிலும், இருவரும் உண்மையான உள்ளன்புடையவர் என பரஸ்பரம் அறிந்து உயிரைவிடுவது மேலான செய்கை. (270)

853. நல்லோர்க்கு நல்லவனாகவும், தீயோர்க்குத் தீயனாகவும் மனிதன் இருக்கவேண்டும். இல்லாவிடில் கவசமணியாதவனை ஆயுதங்கள் சேதித்தெறிவது போல் துஷ்டர்கள் அவனை நாசம் செய்து விடுவர். (308)

P. G. குலசேகரன்.

---

பொறாமைப்பட்ட மனது ஒன்றுகூடி வாழ விரும்புவதில்லை. தன் கண்முன்பாகவே தான் பொறாமைப்பட்டவர்கள் நல்ல உடைகளுடன் செல்வதைக்கண்டு பெருமூச்சுவிடும்படி நேரிடுவதைத்தவிர வேறு லாபமுமில்லை.

# பழங்கால நினைவு



நம்முடைய சென்ற காலத்து நிகழ்ச்சிகளை நாம் தனித்து ஆழ்ந்து நினைத்துப் பார்க்கும்போது இன்பம்; துன்பம், சுகம், துக்கம், நகைப்பு, வெறுப்பு, ஆச்சரியம், கோபம் முதலிய பல உணர்ச்சிகள் நம்மை ஏககாலத்தில் சூழ்ந்து கொள்ளுகின்றன. அப்போது நாமடையும் நிலைமையே ஓர் தனித்தது.

ஃ

நமக்குப் புத்தியறிந்த நாள் முதலாக நமது ஜீவியத்தில் நடந்துள்ள சம்பவங்களை இப்போது நினைப்பின் ஒரு கனவின் தோற்றம் போன்றும் காணப்படுகின்றது. மிகவும் சிறிய பிராயமாயிருந்த காலத்தில் நமக்குச் சமதையான விளையாட்டுச் சினேகிதர்களுடன் பலவிதமாக விளையாடி மகிழ்ந்ததும், சுட்டுக் கண்ணாமூச்சியாடி ஓடியதும், அனேக விதமான விளையாட்டுக்களை ஆடிவிட்டு இடை இடையே ஒருவருக்கொருவர் சிறு சண்டை யிட்டுக்கொண்டு திட்டியதும், உடனே சமாதானமாகி விட்டு மீண்டும் கூட்டமாக ஆடத் தொடங்கியதையும் இப்போது நினைத்தால் ஆ! நாம் அவ்வாறு கவலையற்று விளையாடிக் களித்தோமா! என்ற ஆச்சரியமும், ஒருவித சந்தோஷமும் உண்டாகின்றது.

ஃ

சினேகிதர்களுடன் விளையாடிய பின், அவரவர் வீட்டிற்குப் பிரிந்து சென்று தின்பண்டங்களைக்கொண்டு வந்து ஒன்றாக தின்பதும், பொம்மை முதலியன வைத்துக்கொண்டு விவாகம் செய்வதும், சம்பந்திகள் போலப் பாவித்துப் பேசுவதும், அவ்வழியில் விளையாடியதையும் நினைக்க சிறிது வெட்கமாயும், நகைப்பும் வருகின்றது.

ஃ

விவாகமாகிய பிறகு மாமியார் வீட்டிற்கு முதல் முதல் சென்றதும், அப்போது அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளும், நாம் அப்போ திருந்த நிலைமையையும், முன் ஆடிய சினேகிதர்களைக் காணவும் நேராத சந்தர்பம் வாய்ந்து விட்டதையும், எப்போதோ ஒரு காலத்தில் கண்டால் அப்போது அன்பின் மிகுதியால் பேசியதையும், பாஸ்பரம் மாமி வீட்டின் யோக க்ஷேமங்களையும் இன்னும் மற்ற விஷயங்களையும் பேசிக் கொண்டுப் பிரிவதையும், இன்னும் இவை போன்றவற்றையும் நோக்கில் ஓர்வித ஆநந்தமும் ஏக்கமும் உண்டாகின்றது.

ஃ

அதன் பிறகு புத்தியறிந்து குடும்பம் நடத்தும் சக்தியைப் பெற்ற காலத்தின் நிகழ்ச்சி ஓர் தனித்தது. அந்த வேலை நன்றாக இல்லை, இந்த வேலை இப்படி இருக்கவேண்டும், சமயலில் ருசியில்லை—என்று மாமியார் கூறிச் சற்றுக் கண்டித்ததும், பிறகு திருத்தமாக செய்யக் கற்றுக்கொண்டு அதே மாமியார் கொண்டாடும்படியாக நடந்து கொண்டதையும் நினைத்தால், அதுவும் ஒரு விநோதமே.

ஃ

தாய் வீட்டில் வேலை செய்யாமலும் புத்தகம் படிக்காமலும் சதாவிளை

யாடிக்கொண்டு காலங்கழித்த நாளைத் தனக்குப் புத்திவந்தபிறகு நோக்கின் ஐயோ! நமது பிறவியில் கால் பங்கு காலம் கேவலம் மூடமாகச் சென்று மறைந்து விட்டதே! இனிமையான நூல்களைப் படிக்கவும் நமக்குக் கல்வி யறிவு இல்லாது பாழாகி விட்டதே என்கிற ஏக்கமும் விசனம் தோன்றி விடுகிறது. பிறகு சிறிய புத்தகங்களை வாசித்துக் கல்வியின் தெளிவைச் சிறுகச் சிறுக வரவழைத்துக் கொண்டு பெரிய நூலைப் படித்துப் பேரானந்த மனுபவிக்கின்ற வழியைத் தேடிக் கொண்டதை நினைத்தால் நமக்கே வியப்பாகின்றது.

ஃ

இவ்விதமான பழங்காலத்து நினைவுகள் ஒன்றிரண் டல்லாது எத்தனையோ எண்ணிக்கை யற்றனவாய்க் கிடக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிருசி. அந்தந்தக் காலத்தில் அதது சகஜம். தாய் வீட்டில் சாப்பிடுவதற்குப் பல சேஷ்டைகள் செய்த நாமே மாமி வீட்டில் அந்த அம்மை போட்டவற்றைத் தின்றுப் பெட்டிப் பாம்பாய் இருக்கலானதும் ஒரு காலம்தானே. இவ்விதமே காலம் பலவிதம் மாறுகின்றது. நாட்களோ சென்று மறைகின்றன. ஆயுளோ குறைந்து கொண்டே வருகின்றது. இக்கால நினைவுகள் இன்னும் சின்னாள் சென்றபின் நினைப்பின் அதுவும் ஒரு தனித்த இன்பமே. இவ்விதமேதான் யாவும். சிறுபிராயத்தில் ஒரு சிநேகிதையிட மிருந்து தின்பண்டம் பெற்றுத் தின்பதில் எத்தனையோ வித வேடிக்கை. நான் பங்கு போடுகிறேன் என்பதும், அதில் நமக்கு நிறைய வைப்பதும் ஒன்று. ஒருவருக்குத் தெரியாமல் ஒருவரிடம் பெறுவதும் ஒன்று. அங்கும் பக்ஷணம் உண்டுவிட்டுப் பிறகு இங்கும் உண்பதும் ஒன்று. எனக்குக் கொடுக்கவே இல்லை என்று பொய்யுரைப்பதும் ஒன்று. கீழே கொட்டி விட்டது, காக்காய் எடுத்துக் கொண்டுபோய் விட்ட தென்ற மூட்டை வார்த்தைகள் ஒன்று. நீ எனக்குசரியாய்க் கொடுத்தாயானால் நீ செய்ததைப் பிறருக்குக் கூறாம லிருப்பேன் என்றுமிரட்டுவது ஒன்று. உன் கையிலிருப்பதிலேயே உன் தாயார் எனக்குக் கொடுக்கச் சொன்னாள் என்பது ஒன்று. இவ்விதமான மோசமும் வேஷமும் பித்தலாட்டமுமாக எல்லோரும் சேர்ந்து விளையாடித் தின்று சமமாக மகிழ்ந்த காலமும் ஒன்று.

ஃ

தாயாருக்குத் தெரியாமல் தந்தையிட மிருந்தும், அவ்விதமே தாயிட மிருந்தும், இருவருக்கும் தெரியாது மற்றவரிட மிருந்தும் சில்லரை பெற்றுக்கொண்டு சிற்றுண்டிச்சாலைக்குச் செல்வதும், சிற்றுண்டிகள் வாங்கி சண்டையும், பூசலும், உனக்கு அதிகம் எனக்குக் குறைவு என்கிற சச்சரவுடன் தின்பதும் ஒரு வேடிக்கை.

ஃ

பத்து சிறுமிகள் விளையாடுகையில் ஒருவர் மீது ஒருவர் கோள் சொல்வதும், வீணான பழி காட்டி மனஸ்தாபப் படுவதும், அந்த மனஸ்தாபம் அவர்களின் பெற்றோர் வரைக்கும் சென்றும், அது இவர்கள் பெற்றோரிடம் வந்து, இருதாத்தினரும் பெருத்த சண்டையிட்டும் என் பெண்ணை இப்படி சொன்னாள் உன் பெண் என்கிற பேரிரைச்சல் கிளம்பி பிறகு இருவருக்கும் அடி குத்து குழக் கட்டையுடன் சமாதானமாகி, அந்த காரணத்தினால் சில நாள் பேச்சு வார்த்தை யின்றி இருப்பதும், பிறகு குழந்தைசுபாவமாக விளையாட்டாக

ராஜியாகிப் பழயபடி விளையாடியதும் இதுவும் ஒரு வேடிக்கையே.

ஃ

அறியாமையால் ஒருவர் வீட்டுச் செய்தியை மற்றவர் வீட்டில் சொல்லிவிட, அதனால் இருவீடும் கலக மூட்டையாக, அப்போதுள்ள வேடிக்கை ஒன்று. தாயார் அடித்ததைத் தந்தையுடன் சொல்லித் தாயைத் திட்டச் செய்வதும், பின்னும் தாயிடம் அடிபட்டுத் தேறுவதும் ஒரு வேடிக்கை. இவ்விதமே, வீட்டுக் கலகங்களும் குட்டிச் சண்டைகளும் நாம் குழந்தைப் பருவத்தில் கண்டது இப்போது நமது குழந்தைகள் நமக்கு அதை நினைப்பூட்டுகின்றது. அப்போது அவைகளை எண்ணினால் அது ஒரு தனித்த தினுசாக இருக்கிறது. இவ்விதமே தோன்றும் பழங்காலத்து நினைவுகளுக்கு ஓய்வில்லை. அந்தந்த நினைவு வரும்போது அதனதன் ருசியை அடைவது ஓர் ஆநந்தமாகவே இருக்கிறது.

மூ. வை. கோதைநாயகி அம்மாள்.

---

## கிராமத்துக்குப் போங்கள்.

லார்டு மார்லி இந்தியா மந்திரியாக இருந்த காலத்தில் "கிராமத்துக்குப் போங்கள்" என்று இந்தியா கவர்ன்மெண்டுக்கு யோசனை சொன்னார். அப்படி அவர் எழுதி சுமார் இருபத்தைந்து வருஷங்களாகி விட்டன. ஆனால், கவர்ன்மெண்டார் கிராமத்திற்குப் போகவில்லை. அதற்குள் கிராமம் எங்கேயோ போய் விட்டது. கிராமத்தைத் தேடிக் கண்டுபிடித்து இந்தியாவின் வாழ்வில் அதற்கிருந்து வந்த நிலைமையை அது மறுபடி வகிக்கும்படி செய்தால்தான், இந்தியாவின் புனருத்தாரணம் சாத்தியப்படுமென்று எல்லோருமே சொல்லுகிறார்கள். காலஞ் சென்ற தேசபந்து தாஸ் கிராமப் புனருத்தாரண வேலையில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். உலகினுக்குக் கிராமங்களே அஸ்திவாரம் போன்றவை. அஸ்திவாரத்தில் சரியான வேலை செய்தால் மேல் கட்டிடத்து வேலைகள் சுலபமாகிவிடும். கிராமங்களில் கூச்சலிடாமல் நகரங்களில் கூடிச் சத்தமிடுவதில் பயனில்லை.

---

மகனும் மருமகனும் உள்ள அறையின்பக்கம் எவரும் போகக்கூடாதென்று சொல்வோர்தான், தமது குமாரனும் மருமகளும் என்ன ரகசியம் பேசிக்கொள்கிறார்களென்று, ஏதேனும் ஒரு கலகம் பிடிப்பதற்காக—அவர்களின் அறையின்பக்கம் நின்று சுவற்றுக் கோழிகளைப்போல் கேட்கிறார்கள்.

---

தனக்கு வேண்டியவர்களை ஒருசமயம் வயிறு கொதித்துச் சபித்தாலும், பிறகு அவர்கள் அந்த சாபத்திற்கு ஆளாகும்பொழுது, தானே மனதுநொந்து அதைப் பரிகரிக்கும்படி மறுபடி தெய்வத்தைப் பிரார்த்திக்கவும் நேரிடுகிறது.




# உழவனும் தத்துவ அறிஞனும்.

(41-ம் பக்கத் தொடர்ச்சி.)

விளக்கிடின் :

நாடோறும் உழைத்து நறுமலர்த் தேனுகர்
[1]தோடோடு வசிக்கும் தேனீத் தொழிலேன்
உள்ளங் கிளரும் ஒள்ளிய தொழிலாம்

கூட்டமாக வாழ்கின்ற தேனீக்கள் நல்ல வாசனையுள்ள புஷ்பங்களின்
இடையே சென்று புஷ்பங்களுக்கு ஒரு பின்னமும் உண்டாகாதவாறு தேனை
மாத்திரம் அருந்தி வாழ்கின்றன. யானும் அவ்வாறே அதன் மேலான தொழி
லைக் கொண்டு பிறருக்குத் துன்பம் தராதவகையில் என் ஜீவனத்தைச் செய்ய
மனங் கொண்டுள்ளேன்.

[2]வெள்ளக் கணக்கா வெளிதிரி [3]மடியிலா
எறும்பினை நோக்கும் எவரோ [4]சேமியார்
வருங்கால் எண்ணி வேண்டுபல் லுணவே ?

சோம்பல் இல்லாது சதா உழைத்து வாழும் எறும்பு எவ்விதம் மாரி
காலத்துக்காகக் கோடைகாலத்தில் உழைத்துச் சேர்த்து வைத்துக் கொண்டு
மாரிகாலத்தில் விசாரமற்று மகிழ்வாகக் கழிக்கின்றதோ, அவ்விதமே யானும்
எனது மாரிகாலத்திற்கானவற்றை இப்பொழுதே·தேடிச் சேகரித்துக் கொண்
டுள்ளேன்.

நன்றியின் உருவாம் நாயினைக் காண்பவர்
என்றும் மறப்பரோ ஈசன தின்னருள் .

நன்றியுள்ளது நாய். அது எசமானிடம் காட்டும் விசுவாசம் அற்ப
சொற்பமல்ல. சிறு நன்றியே யாயினும் அதனை என்றும் மறவாது தன் நன்றி
யறிதலைக் காட்டு மியல்பைக் காணுகையில், கடவுள் நம் பொருட்டு அருளிய
வைகளை நினையாமலும், அதற்கு நாம் நன்றியுள்ளவர்களாக—பக்தர்களாக
வாழாமலும் இருக்க இயலுமா? ஆண்டானுக்கடிமை எவ்விதம் இருக்க
வேண்டு மென்பதை நாயொன்றே நமக்குப் போதிக்கின்றது.

என்றும் மாறு இன்பக் காதலை
அன்றிற் பறவையால் அறிகுவன் யானே.

குடும்ப வாழ்க்கையில் உள்ளன்புள்ளவர்களாக நாம் வாழ வேண்டு
மென்பதை ஒன்றைவிட் டொன்று பிரியாத அன்றில் பட்சிகள் வழியாக
அறிந்து கொள்ளுகிறோம்.

---

1. தோடோடு—தனது கூட்டத்தோடு.
2. வெள்ளம்—மிகுதி. 3. மடியிலா—சோம்பல் இல்லாத.
4. சேமித்தல்—காவல்பண்ணிவைத்தல், சேர்த்தல்.

நிறைபேடைக் குஞ்சை நேர்ந்துகார்த் திடுமம்
முறையே பெற்றோர் மேற்கொளு முறையாம்

குழந்தைகளைக் காக்கும் முறைகளை நமக்குப் போதிப்பது, நிறைந்துள்ள சிறுகுஞ்சுகளைக் காப்பாற்றும் பெட்டைக்கோழியாகும்.

இன்னும் பிறவும் இயற்கைத் தாயின்
இன்பப் போதனை அன்னவள் முன்னில்
உயர்வுந் தாழ்வும் ஒன்றுமே இல்லையே
சுதந்தர வாழ்வே சுகவாழ் வேனவவள்
நிதம்நிதம் நமக்கு நேர்மையாய் ஓதுவாள்

ஆகவே:

கற்றவன் யானெனக் கருத்திற் கோள்ளேன்
மற்றவர் கீழெனமனத்திலும் மதியேன்
போலிக குணமும் புல்லொழுக் குங்கொளு
[4]மாலுடை மனிதரை மகிதலம் போற்று

கத்தித் திரியும் [5]கஞ்சனந் தன்னை
இத்தரை யாரே நத்திப் போற்றுவர்
பயனில் [6]மாற்ற பகரும் ஒருவனை
[7]நயனிலாப் பதரென நவிலும் உலகே

தத்தமக் கியைந்த தகும்வழி கோண்டே
சித்தங் குளிர சிறகினை அடித்தே
பறக்கும் பற்பல பறவையும் ஒரேவழி
ஒழுக உடன்பட ஒன்றால் யானும்

இழுக் கேன எவரையும் எதிர்த்துக் கூறேன்
அவனவன் புரிபவ அவனவன் அறிவே
[8]வேதன் படைத்தவை நூதன மாமே
கற்பதேன் பதூஉம் கடினமாச் செய்கையே

அற்பமே ஆயினும் ஆண்டவன் அருளால்
போந்ததிவ் விடமேன பேருமையாக் கோள்க
சாந்தம் வேண்டின் சமரினை விடுகே
இயற்கைக் கேன்றும் எதிரா நின்றே

எனவே:

---

4. மாலுதல்—மயங்குதல். 5. கஞ்சனம்—கரிக்குருவி.
6. மாற்றம்—பேச்சு. 7. நயனிலா—கண்ணில்லாத. 8. வேதன்—கடவுள்.

## இயல்பிலாத் தொழிலை இயற்று திருப்பின் துன்பமே இல்லா இன்பம் பெறுவீர்

இன்னும் உலகிற்காவன பலவற்றை இயற்கையை உற்றறிந்து கற்றுத் தான் நடப்பதாகவும், மனிதர்களில் ஒருவர் உயர்ந்தவரென்றும், மற்றவர் தாழ்ந்தவரென்றும் இயற்கையில் கிடையாதெனவும், சுதந்தர வாழ்வே இயற்கைத்தாயின் போதனை யெனவும், கற்றதால் தனக்கு அகங்கார மில்லை யாதலின் ஒருவரையும் அவமதித்தல் இல்லை யெனவும், போலி மனிதர்களை உலகம் என்றும் விரும்பியதில்லை யெனவும், வீணே கத்தும் கரிக்குருவியை யாரும் விரும்புவதில்லாதது போலவே பிரயோஜன மில்லாமல் வெட்டிப் பேச்சுகளைப் பேசுபவர்களை உலகம் கண்கெட்ட பதரென உரைப்பதாகவும், பட்சிகளைப் போல் அவரவர் விருப்பின்படி நடப்பதுதான் தனக்குப் பிரிய மெனவும், தனக்கு விருப்பமான வழியில் ஒருவர் நடவாததற்குத் தான் வருந்துவதில்லை யெனவும், இயற்கைக்கு மாறாக எக்காரியமும் செய்யாது நடந்து வந்தால் என்றைக்கும் இன்பமே உண்டெனவும், கடவுளது சிருஷ்டி அளவு கடந்ததெனவும், அதன் மகத்துவத்தினை அறிய நம்மல் இயலாதெனவும், வாக்குவாதங்களில் ஈடுபடாது நடந்து வந்தால் மனோசாந்தம் உண்டாகு மென்வும் கூறினர்.

தத்துவன் :

அன்பே உருவா அமர்ந்துள அறிஞ!
இன்றியான் பெற்றதிவ் வுலகேலாம் பெறுக!
என்பால் இருந்த யானெனும் அகந்தை
என்பால் அகன்றது: நன்னெறி யடைந்தேன்
"ஆக்கியோன் கருத்தே அமைந்திடு புத்தகம்"
நோக்கும் எவனும் நண்ணிய அறிவைப்
பெறுகுவான் [9] விழையின் புத்தக அறிவை
பெறுமுல கறிவோடு பேணுக பெரிதே!
என்பதா உரைத்தவன் ஏகினன்
அன்பரும் விடைதரும் அகமகிழ் வாகவே!

இவற்றைக் கேட்ட தத்துவசாஸ்திரி சந்தோஷ மடைந்தவனாய் அப்பெரியவரைப் புகழ்ந்து, இப்போது, தான் போதிய அறிவு பெற்றாய்ந்ததாகக் கூறி, புத்தகம் ஆக்கியோன் கருத்து அவனது அறிவுக்கு உள்ளடங்கிய தாகவே சுருங்கி இருக்கு மாதலின், தெளிவான அறிவைப் பெறவிரும்புபவன் உலக அறிவோடு புத்தக அறிவையும் பேணுதலே நலமெனத் தெரிந்து கொண்டதாகவும் கூறினன். அதன்பின் அப்பெரியார் விடைதா, தத்துவ சாஸ்திரியும் புது அறிவு பெற்று ஏகினன் மகிழ்வாகத் தன்னிருப்பிடம்.

(Adopted from "The Shephered and the Philosopher" by Gay.

மு. துரைப் பிள்ளை.

---

9. விழையின்—விரும்பினல்.




## 3. இல்லறம்.

(70-ம் பக்கத் தொடர்ச்சி.)

229. "பெண்ணுக்குப் பொன்னிட்டுப் பார், சுவருக்கு மண்ணிட்டுப் பார்."

ஆபரணங்கள் பெண்களின் அழகை அதிகப்படுத்திக் காட்டுகிறதென்றும், உலக மதிப்பில் அவர்களை உயர்த்திவைக்கிற தென்றும், அழகில்லாத பெண்ணுக்குங்கூடச் சிலநகைகளை அணிவித்தால் அவளும் அழகாகத் தோற்றக்கூடுமென்றும், சலிப்புடனுள்ள பெண்ணை நகைகளைக்கொண்டு உத்ஸாகப் படுத்தலாமென்றும், அது, விழுந்து போகக்கூடிய சுவருக்கு மண் பூசினுல் முன்னிலும் கொஞ்சம் நன்ருக இருப்பதான நிலைக்கு வருவது போல இந்தப் பெண்ணும் திருந்தி நன்னிலைமைப்படலாமென்றும் இந்தப் பழமொழியின் கருத்து. மண்ணிட்டு மெழுகிய சுவர் அழகாகக் காண்பது போல, நகைகளை யணிந்துள்ள நங்கையும் ஒருவித லாவண்யத்தோடும் இலங்குவாளாதலின் சில குறித்த நகைகளையேனும் பெண்ணுக்கு அணிவித்தலும் அவசியமானது தான். அதனுல் பெண்ணுக்கு மனோ ஸந்துஷ்டி உண்டாவதுடன், அந்த ஆபரண லாவண்யத்தில் கணவனுக்கும் அவளிடமாக ஒருவித அழகுதோற்றி அதில் அவனும் ஈடுபட்டு இருவரும் மன வொற்றுமையுடன் சேர்ந்திருந்து ஆநந்திக்கவும் கூடுமானதாகும். ஆனுல், ஒரு பெண்ணுக்கு நகையழகு பெரிதாகாது. நகையழகில் குடும்பக்ஷேமம் உண்டாகிவிடாது. குண அழகில்தான் குடித்தனம் செழித்து மேலோங்கும். குண அழகுடன் நகையழகுங் கூடிடில் அது மேன்மையான நிலையாகும். ஆபரணத்தில் அதிகமான தொகைக்கு முதலிடுதல் விவேகமாகாது. ஒரு குறித்த அளவில் நகைகளை முடித்துக்கொண்டு, பிரதி மாதந்தோறும் தன் மனைவியின் பேருக்கு தபாலாபீஸில் ரொக்க ஸர்டிபிகேட் என்னும் ஐந்து வருஷ வட்டிச் சீட்டில் சிறு சிறு தொகையாகச் செலுத்தி வருதல் சிலாக்கியமாகும். அது வட்டியால் வளரக்கூடிய முதலுமாகும். ஆபரணத்தில் இடும்தொகையோ தேய்ந்து நஷ்டப்படக் கூடியதேயன்றி வளரக் கூடியதன்று. செய்த விலைக்கு எந்த ஆபரணமும் விற்கும்போது விலைபடுவதில்லை. ஒருபவுன் 18, 19, ரூபாய் விலையாக இருந்த காலத்தில் நகைகளைச் செய்தோர் பவுன் 13-8-0, ஆக விலை யிறங்கி விட்ட இப்பொழுது அவற்றை விற்கப்புகின் எவ்வளவோ கனத்த நஷ்டம் நேருகின்றது. இதுமாத்திரமே யல்ல, நகைகளைச் செய்யும்போதே திராசில் நிறுத்திய அளவுக்குச் சில குன்றுமணி எடைகுறைந்தே கிடைக்கின்றது. அது சேதமென்று தட்டாசாரி சொல்லிவிடுகிருர். இன்னும் அவற்றுள் தாம்பிரப் பொடிகள் எவ்வளவு வைத்து ஊதப்பட்டதோ யார்கண்டார்? செய்த நகையை

மறுபடியும் அழித்துச் செய்வதில் இன்னும் அதிக நஷ்டம் ஏற்படுவதுடன், புதிய நகைக்கு இன்னும் கொஞ்சம் பொன் சேர்த்தே செய்யும்படியும் ஆகிறது. இவ்வளவு கஷ்டங்கள் இருந்தாலும் நகையழகும் ஒரு தேவைப்பட்ட விஷயமாயிருப்பதால் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான். அதிலும் ஒரு எல்லையில் நின்றுகொண்டு குறித்த அளவுக்கு நகைகளைச் செய்துவிட்டுத் தனது மனைவியின் பேருக்கு லைப் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் சேர்ந்து அந்த வகையில் அவளுக்கு ஒரு ஆதாரத்தைத் தேடிவைத்தல் புத்திசாலித்தனமான காரியமாக இருக்கும். மேலே தெரிவித்தபடி தபாலாபீஸ் ஐந்து வருஷச் சீட்டிலும் மனைவியின் பேருக்குச் சேர்த்து வைக்கலாம். தன் பேருக்கே பணம் சேர்த்து வருவது ஒருபக்கமிருந்தாலும், தன்னை நம்பிய மனைவியின் பேருக்கென்று அவள் பெயரால் சேர்த்து வைத்தலும் அவசியமாகும். அவள் பேருக்கு இருந்தால்தான் அது அவளுடைய உண்மையான நகை போலாகும். தான் கண்மூடிக்கொண்ட காலத்தில் தன் கடன், தாயாதிவகை இவற்றால் தன் பேருக்குள்ள சொத்து பணம் இவைகள் பாதிக்கப் படவும் கூடும். ஆதலின், மனைவியின் பேருக்கென்றே ஒரு குறித்த தொகை போட்டு வருதலும் அவசியமாகும். ஒரு பெண்ணுக்கு அணிவித்த ஆபரணங்கள் அவளுக்கே சொந்த சொத்தாகி, மற்ற தாயாதி வகைகளாலும் கடன்காரர்களாலும் அபகரிக்க முடியாததாகி விடுகின்றது. அதுபோலவே உறுதியுடன் அவளுக்கு நிலைப்பதற்கு அவள் பெயருக்கென்றே சில தொகைகளைப் பிரதி மாதமும் போட்டு வந்தால்தான் பிற்காலத்தில் அவள் க்ஷேமமாயிருக்கவும் முடியும். இவ்வளவு வற்புறுத்திச் சொல்வது ஏனெனில், நகைகளுக்காகச் செலவிடுகிற தொகையை ஒரு அளவில் நிறுத்திக்கொள்ளும்படி சொல்வதால், பாக்கியுள்ள தொகைக்கு, அத்தொகையை அவளே பெற்றுக் கொள்ளக் கூடியதாகவும், அவளுக்கே சேரும்படியாகவும் வழி வகை செய்து வைத்து விடவேண்டுமென்று விளக்கும் பொருட்டாகவே யாகும். ஒரு பெண்ணுக்கு நகையை விட, வட்டியால் வளரும் தொகை ஒரு பக்கம் இருக்குமானால் அதற்கு விசேஷித்த மதிப்புண்டு,

## 230. "பெண்ணைக் கொடுத்தாயோ கண்ணைக் கொடுத்தாயோ?"

பெண்ணின் அருமையை விளக்கும் பழமொழியிது. பெண் குழந்தையின் மீதுள்ள வாஞ்சையும் கவலையும் ஆண் குழந்தையின் மீதில்லை. ஒரு பெண்ணைப் பெற்றவுடன் "பெண்ணா பிறந்தது" என்று மனச்சலிப்புடன் சொல்லிக் கொள்வது பெண் பிறப்பை இகழ்ந்ததாக அல்ல; அந்தப் பெண்ணைக் கடைசிவரையில் கண்ணீர் கலங்காவாறு காக்கவேண்டுமே யென்ற கவலையால்தான். நாம் எவ்வளவு செல்வமாக வளர்த்தாலும், அந்தப் பெண்ணைக் கொடுத்த இடத்தில் எருமையாகப் பாவிக்கப்படுதல் ஸர்வ சாதாரணம். அது மனதிற்கு எவ்வளவோ வாதனை. மேலும், இத்தனை நாள் வளர்த்து நமது அருகில் படுக்கவைத்துக்கொண்டு கொஞ்சிய பெண்ணைப் பிறர் வீட்டிற்கு அனுப்பிப் பிரியும்படியான காலமும் வரும்போது கண்ணீர்விடவே நேருகின்றது. ஆனால், ஒரு பெண்ணுக்குப் புகுந்த இடம் அழகேயன்றிப் பிறந்த இடம் சிறப்பு தராது என்பதையும் உணர்ந்தே இருக்கிறோம். நமது பெண் நமது கண்ணைப்போன்று ஒரு அருமையும் அபூர்வமுமான வஸ்துவாதலால், அந்தப் பெண்ணைக் கொடுத்த இடத்தில் அந்தப் பெண்ணின்

ஷேமத்துக்குக் குறைவில்லாதிருக்க நாம் கண்ணியமாய்த் தக்கவாறு நடந்து கொள்ள வேண்டியும் வருகின்றது. நமது பெண்ணின் நலத்தை மனதிற் கொண்டு அவளது கணவனைக் கௌரவமாகவும் நடத்தக் கடமைப்படுகிறோம். நமது மரியாதையில் ஏதேனும் தாழ்வு நேருமாயின், அது அவளது கணவனின் மனத்தை வருத்த, அதனால் அவன் நமது பெண்ணைத் துன்புறுத்தவும் கூடும். நாம் நமது ஆத்திர சிந்தையால் அவனைத் தூஷிக்கப்போக, அதன் பலனைக் கஷ்டப்படுவது நமது பெண்ணே யென்பதையும் நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். நமது கண்ணைப் பாதுகாப்பதில் நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறோமோ அவ்விதமே நமது பெண்ணைக் கொடுத்த இடத்திலும் நாம் ஜாக்கிரதையாகக் குற்றச்சொல் வாராமல் நடந்துகொள்ள வேண்டுமென்பது இந்த பழமொழியின் கருத்து. நாம் பூர்வத்தில் பிறருக்குப் பட்ட கடன் வகை ஏதோ இருந்துதான் இந்த ஜன்மத்தில் பெண் குழந்தையைப் பெற்று பிறருக்குக்கொடுத்து அந்தப் பூர்வகடனைத் தீர்த்துக் கொள்கிறோமென்றே கருதும்படியாகவும் பெண்ணைப் பெற்ற சங்கதிகளும் பரிதவிப்புகளும் இருக்கின்றன.

## 231. "பானை ஒட்டினாலும் மாமி ஒட்டாள்."

உடைந்த மண்பானை மறுபடியும் ஒட்டாதென்பது தெரிந்ததே. அந்தப் பானைகூட ஒரு சமயம் ஒட்டிக்கொண்டு விடலாம். ஆனால் மாமியோ மருமகளுடன் ஒருபோதும் ஒட்டவே மாட்டாள் என்பது இந்தப் பழமொழியின் தாற்பரியம். இது உலகில் பிரசித்தமான சங்கதி. மாமி தனது மருமகளிடம் அபிமானக் குறைவாக நடந்துகொள்வதும், அவளை ஹிம்ஸிப்பதும் இந்த நாகரிக காலத்திலும் நாளைக்கும் நடந்தே வருகிறது. காலமுழுதும் துவேஷம் சாதிக்கும் மாமிகள் இன்னும் எத்தனையோ லக்ஷம்பேர் இருக்கின்றனர். இவர்களைப் பரிபூரண சுயராஜ்ய இந்தியாவும் திருத்த முடியாது. மருமகளைத் தன் குமார்த்திபோல நினைக்கும் தங்க குண மாமிகளும் அநேகர் இருக்கிறார்களாயினும், மாமி கொடுமையே எங்கும் சொல்லிக்கொள்ளும் வழக்கமான சங்கதியாகும். இதைக் குறித்து அதிகமான வியாக்கியானம் தேவையில்லை. மாமி மெச்சிய மருமகளில்லை யென்பது மற்றோர் பழமொழி. மருமகள் ஒட்டாத சங்கதியும் உண்டு. அது வேறே ஒரு தனி விஷயம். (தொடரும்.)

---

### சிறுகச் சிறுகத் தொடர்ந்து செய்து செல்.

தினமும் கொஞ்சங் கொஞ்சமாய் உனது வேலையைச் செய்து கொண்டுபோ. அப்பொழுது வேலை சுலபமாகும். மற்றவைகளுக்குக் கடவுளது வழிகாட்டுதலை நம்பியிரு. வீட்டைப் பழுது பார்க்க 500—ரூபாய் வேண்டுமே என்று பிரமித்துப் பின்னடையாதே. முதலில் 150—ரூபா செலவிட்டுப் பழுது பார்த்துவிடு. பிறகு சிறிது சிறிதாகத் தொடர்ந்து பழுது பார்த்துச் சென்றால் எல்லாம் சரியாகிவிடும். பல துளி பெரு வெள்ளம்.




(63-ம் பக்கத் தொடர்ச்சி.)

662. The tidal wave of deeper souls Into our inmost being rolls, And lifts us unawares Out of all meaner cares.

LONGFELLOW.

ஏதாவது கேவலமான செய்கையை நாம் செய்ய முற்படுங்கால், நம்மன சாக்ஷியாகிய கடலினின்றும் அலைகள் நமக்குத் தெரியாமலே உதிக்கின்றன.

லாங்பெல்லோ.

663. In love of home the love of country has its rise.

DICKENS.

வீட்டின்மேல் அபிமானம் வைப்ப தினின்றே நாட்டின்மேல் அபிமானம் வைப்பதும் ஆரம்பமாகிறது.

டிக்கன்ஸ்.

664. Hope, tho, friending, does what she can for she points evermore up to heaven.

LONGFELLOW.

நம்பிக்கை என்பவளும், சிநேகம் என்பவளும் தங்களால் ஆனமட்டும் உதவிபுரிகிறார்கள். எப்படி யெனில், அவர்கள் ஸ்வர்க்கலோகம் போவதற்கு எப்பொழுதும் வழிகாட்டுகிறார்கள்.

லாங்பெல்லோ.

665. Religious service is to be entirely with rejoicing,—... only brightness of heart can please the Gods. RUSKIN.

பூஜை, ஆராதனை முதலியவை எப் பொழுதும் ஸந்தோஷமாய்ச் செய்ய வேண்டும். பரிசுத்தமான மன தொன்றே கடவுளை ஸந்தோஷ சாக ரத்தில் ஆழ்த்தும். ரஸ்கின்.

666. Cowards die many times before their death.

SHAKESPEARE.

தைரியம் இல்லாத ஒருவன் அவன் இறப்பிற்கு முன் பல தடவைகளில் இறக்கிறான். ஷேக்ஸ்பியர்.

667. Do the work that's nearest, Though it's dull at whiles, helping, when we meet them, Lame dogs over stiles.

CHARLES KINGSLEY.

உன் ஸமீபத்திலிருக்கும்வேலையை, அதுசமயாசமயங்களில் மனோதிருப்தி யைக் கொடுக்கக் கூடியதாக இல்லா திருப்பினும் செய். உதாரணமாக, நொண்டி நாயை வேலிக்கு அப்பால் போக உன்னால் வேண்டிய உதவி செய். கிங்ஸ்லி.

668. Dost thou love life? then do not squander time, for that is the stuff life is made of.

BENJAMIN FRANKLIN.

---

ஒரு புதுத் தொழிலை ஆரம்பிக்கும்பொழுது அதற்கு உதவியா யிருந்தவ னுக்கு நாமம் சாத்துவோம், பிறகு தங்களுக்கும் பட்டைநாமம் போட்டுக் கொள்வர். அந்தத் தொழிலும் முதலில் விருத்தியடைவதுபோல் தோன்றி பிறகு படுத்துவிடும்.

நீ வாழ் நாட்களை நேசிக்கின்றனையா? அப்படியாயின் காலப் போக்கை அனுவசியமாய்ச் செலவழிக்காதே. ஏனெனில், ஜீவியகாலமே காலம் என்பதனால் ஆக்கப்பட்டது.

பென்ஜமின் பிரேன்க்லின்.

669. I would rather have the affectionate regard of my fellow-men thah I would have heaps and mines of gold. DICKENS.

என் முன்பு ஒரு பக்கம் பொற்குவியல்களும், பொற்சுரங்கங்களும், மற்றொருபக்கம் என் நாட்டினர் மேலிருக்கும் அன்பையும் வைத்தால், நான் என் நாட்டினரின் மேலிருக்கும் அன்பையே மேற்கொள்வேன்.

டிக்கன்ஸ்.

670. From the barred visor of Antiquity Reflected shines the eternal light of Truth, As from a mirror! LONGFELLOW.

பழயகாலம் என்னும் கண்ணாடியினின்றும் உண்மை என்னும் ஜோதி விளக்கு பிரகாசிக்கின்றது.

லாங்பெலோ.

671. Let your own discretion be your tutor; suit the action to the word, the word to the action.

SHAKESPEARE.

நீ எதை உறுதியாய் நினைக்கிருயோ அதே உன் உபாத்தியாயராய் இருக்கட்டும். நீ நினைத்ததற்கேற்க, உன் செய்கைகள் வார்த்தைக் குகந்துபோகவும், வார்த்தைகள் செய்கைகளுக்குகந்துபோகவும் சரிப்படுத்திக்கொள்.

ஷேக்ஸ்பியர்.

672. Cry, faint not, climb the summits slope; Beyond the furthest flights of hope; Wrapt in dense cloud from base to cope.

TENNYSON.

அடியிலிருந்து நுனிவரை அடர்ந்த மேகங்களால் மூடப்பட்ட நம்பிக்கை என்னும் சரிவின் மீது அழாமலும் பின்னடையாமலும் ஏறிப்போ.

டேன்னிசன்.

673. Open our eyes, Thou Sun of life and gladness, That we may see that glorious world of Thine. KEBLE.

ஸந்தோஷம் என்னும் சூரியனே! நினது மகிமை பொருந்திய உலகத்தைக் கண்ணுற எங்களது கண்களைத் திறப்பாயாக கேப்பில்.

674. Small curs are not regarded when they grin, But great men tremble when the lion roars. SHAKESPEARE.

அற்ப நாய்கள் கோபங்கொண்டு உறுமினுலும் அவைகளை மதியார். ஆனல், பெரியோர் சிங்கம் கோபம் கொண்டால் நடுங்குகிறார்கள்.

ஷேக்ஸ்பியர்.

S. ஸ்ரீரங்கராஜு,

"ஜெகந்நாதபாக்".

---

கோபத்தில் அடிக்கும்பொழுது அதனால் பலத்த காயம், மூர்ச்சை, மரணம் நேர்ந்து தான் குற்றவாளியாகாதிருக்கவும், போலீஸார் கையில் சிக்கிக்கொள்ளாதிருக்கவும் கூடியவரையில் முன்யோசனையுடனும் நிதானிப்புடனும் நடந்துகொள்ளப் பார்க்கிற புத்தி அந்த சமயம் வேண்டும்.




# எலிஜபெத்து பாரெட்டு ப்ரௌநிங்கு.

## 1806-1861.



கல்வி கற்ற பெண்மணி ஒரு வீட்டிற்குத் தீபம் போன்றும் பிரகாசிப்பாள். கற்றவள் எனில், கல்வியிலுள்ள ருசிகரத்தைக்கண்டறிந்து அனுபவித்துச் சுவைப்பவள் என்று பொருள்படும். இரண்டு எழுத்துகளைக் கூட்டி வாசிக்கத் தெரிந்தளவிலேயே கல்வி கற்ற பெண்ணாகி விடாள். "எங்கள் பெண்ணும் படித்திருக்கு" என்று சொல்வதிற் பயனில்லை. கல்வியின் ரஸத்தை வாரியுண்டு ஆநந்தித்த பெண்மணிகளில் ஒருவரது சரித்திரத்தை இங்கு சுருக்கிச் சொல்லுகிறோம். ஃ

எலிஜபெத்து பாரெட்டு என்ற பெண்மணி ஆங்கில நாட்டின் வடபாகத்தில் 1806-ம் வருஷத்தில் பிறந்தாள். சிறு பிராயத்திலேயே வித்தையில் தேர்ந்து கவிபாடுவதில் சமர்த்தையாளாள். இளமையில் தானே நான்கு அத்தியாயங்களுடன் கூடிய பெருங் காவியமொன்றை வரைந்தாள். தந்தை அதனை நோக்கிப் பூரித்தார். எலிஜபெத்து பாரெட்டு மிக்க மெல்லிய சரீரமும், அடிக்கடி வியாதிப் படுக்கையில் வீழ்பவளுமாய் இருந்தாள். அதனால் வெளியில் செல்வதற்கின்றி வீடே கதியாய்க் கிடந்தனள். நன்கு கற்றோர் ஒவ்வொருவருக்கும் பகவான் விலக்கொணாத ஒரு குறைவினை நுழைத்து விடுவதும் வியப்பே! எலிஜபெத்து படிப்பதில் பாட்டிக்கு அவ்வளவு பிரியமில்லை. அதை விடப் பூ வேலை செய்யலாமே என்பாள். தந்தையோ தன் குமார்த்தியின் வாசிப்பில் சிரத்தைகொண்டு விருத்தி செய்து வந்தார். அவரது நண்பரும் கண்ணில்லாதவருமான கிரேக்க பாஷா நிபுணரொருவர் அந்தப் பாஷையில் விசேஷித்த பயிற்சி கொள்ளுமாறு செய்தார். ஃ

எலிஜபத்தின் இருபதாவது பிராயத்தில் அவள் முன்னும் பின்னும் பாடிய கவிகள் யாவற்றையும் ஒன்று சேர்த்து ஒரு புஸ்தகமாகத் தன் பெயரில்லாமல் வெளியிட்டாள். அவை அத்தனை ஆழ்ந்த பொருள்கள் கொண்டிராவிடினும், அவள் முயற்சி தளரவில்லை. இதனிடையே அன்னை யிறக்கவும், தந்தை திரவிய நஷ்டமடையவும், தன்னுடன் பிறந்த எழு பேரும் போஷிப்பாரின்றித் தவிக்கவுமான சோதனைகள் நேர்ந்தன. இந்தக்

---

குழந்தைகளின் முகமே இவ்வுலகில் பெரிய ஆறுதலையும், விசேஷ துக்கப்பிரலாபங்களின் சகிப்பையும் தந்து உயிருடன் ஜீவிக்கச் செய்கிறது.

கஷ்டங்களால் தந்தை தமது அழகிய வீட்டை விற்றுவிட்டு லண்டன் நகரத்தில் குடி புக எண்ணினார். கடைசியாக இங்கிலாந்தின் தென் கரைப் பட்டணமொன்றில் போய் வசிப்பதானார். இவ்வளவு பாடுகளின் மத்தியிலும் எலிஜபெத்து தன் படிப்பை விட்டுவிடவில்லை. படிப்பை எவர் விடுவதில்லையோ அவரை அந்தப் படிப்பும் விடுவதில்லை. எலிஜபெத்து பாடல்கள் செய்தவாருகவே இருந்து, தனது பாடல்களடங்கிய இரண்டாவது நூலை 1833-ம் வருஷம் வெளியிட்டாள். எவ்வளவுக்குக்கஷ்டப்படுகிருர்களோ அவ்வளவுக்கும் எழுதுவதற்கு வேண்டிய புதுச் சரக்கு அதிகமாக கிடைப்பது கல்விமான்கள் அநுபவமாகக் கண்டறிந்த விஷயம். எலிஜபெத்து இதற்கு ஒரு உதாரணமாயினள்.

ஃ

எலிஜபெத்தின் பாடல்கள் அவ்வப்போது பத்திரிகைகளில் வெளிவந்தவாறிருந்தன. அவளது கவிதைகள் இயற்கைக் கவிகளாயும், நேரில் கண்ட அனுபவங்கள் திரண்டவைகளாயும், ஆழ்ந்த நுண்பொருளும் தத்துவ விளக்கமுமுள்ளனவாயும் இலங்கின. "விக்டோரியாள் சிந்திய கண்ணீர்" என்று மகாராணி விக்டோரியா அவர்களின் மீது பாடிய பாடல் எவர் மனத்தையும் உருக்குவதாகும்.

ஃ

ஆனல், இந்த நாரீமணியின் காலமோ சதா பிணிவாய்ப்பட்டு ரோவதிலேயே கழிந்தது. அவள் பிழைப்பாளோ என்று ஸம்சயிக்கும் வாருன நிலைமைக்கும் வந்து விட்டதுண்டு. இவ்வளவு கேவலஸ்திதியிலும் படிப்பதையும் எழுதுவதையும் அவள் விட்டு விடவில்லை. அது ஒரு பக்கம் நடந்தவாறிருந்தது. பின் "தூக்கம்" என்ற தனிக் கவிதைகள் அடங்கிய மூன்ருவது நூலையும் வெளியிட்டாள்.

ஃ

இந்தசமயம் இன்னெரு ஆபத்து! அவளது பிரியமான தமயன் படகு விளையாட்டில் ஜலத்தில் மூழ்கி யிறந்துபோனன். "இந்தத் துக்கம் என்னை இடி இடித்துத் தள்ளியதற்கு ஒப்பாக இருந்தது" என்று வரைந்துள்ளாள். தமயனின் பிரிவுப் பாடல்கள் கல்மனமும் கரையும். மீண்டும் தனது பாடல்களை ஒன்று சேர்த்து 1844-ம் வருஷத்தில் வெளியிட்டபோது, அதனில் "சிறுவரின் பிரலாபம்" என்ற பாடல் யாவர் மனத்தையும் கவர்ந்து இரங்கவைத்துப் பெருங் கிளர்ச்சியை யுண்டுபண்ணிற்று.

ஃ

அந்த நாளில் பாலர் பாலகிகள் பூமியின் கீழுள்ள நிலக்கரிச் சுரங்கங்களில் கண்ராவியான வேலைகள் செய்தும், பாரவண்டிகளை இழுத்தும், கல்விப் பயிற்சியற்றும், சூரிய வெளிச்சமில்லாத இருளினிற் கிடந்து வேலைகள் செய்தும் துன்புறுவதாயினர். இயந்திரசாலைகளிலும் சிறுவர் சிறுமியரின் வாதனை குறைந்ததாயில்லை. தினத்திற்கு 14, 15-மணி நேரம் வேலை செய்யவும் நிர்ப்பந்திக்கப்படுவர். இந்தக் கோரத்தைத் தடுக்க அப்போது எவ்வித சட்டமும் இல்லை. இந்த இளங் குழந்தைகளின் பாடுகளைப் பற்றியே எலிஜபெத்தும்

---

உன்னைக் கேவலப்படுத்தியவர்களையும், அவமானப்படுத்தியவர்களையும் பற்றிக் கடவுளிடத்தில் பாடம் ஒப்புவித்துவிட்டு நீ விடுதலை பெற்றுக்கொள். கண்டிக்கிற மற்ற காரியத்தைக் கடவுள் நாளடைவில் பார்த்துக்கொள்வார்.

"சிறுவரின் பிரலாபம்" என்று கவிதைகள் புனைந்து வெளியிடுவதானாள். அதன் பயனாக எழுந்த கிளர்ச்சியின் மேல் பார்லிமெண்டில் 14-பிராயம் நிரம்பாத சிறுவர் சிறுமியரை வேலைக்குவைத்துக் கொள்ளக் கூடாதென்றும், அவர்கள் பாடசாலையில் கட்டாயக் கல்வி பெற வேண்டுமென்றும் புதிதாகச் சட்டமேற்படலானது.

ஃ

"சிறுவரின் பிரலாபம்" என்ற பாடலில் இரண்டை மட்டும் இங்கு தருகிறோம்.

I

கோவிளங் கன்று மாட்டுக்
குட்டியு மானின் கன்று
மேவிய பறவைக் குஞ்சும்
வேறுசிற் றுயிரும் தத்தம்
நோவுறு விளமை தன்னில்
நுவலு மின்புற்றி ருக்கும்;
பாவமோ வேழைப் பாலர்
பரிதவித் தழுதல் பாரீர்!

II

பேர்பெறு சுதந்த ரங்கள்
பெற்றவிவ் விராச்சி யத்தில்
நேர்தர விளையாட் டாற்று
நேசமா மிளமை தன்னில்
வார்தரு மேழைப் பாலர்
மாத்திரங் கண்ணி னின்று
நீர்சுரந் தழுகை பார்த்தல்
நியாயமோ நாட்டீர் சொல்லீர்!

ஃ

இவ்விதமே அமெரிக்காக் கண்டத்தின் அடிமைகள் துயரத்தைப் பற்றியும், கொடுங்கோலாட்சியில் இத்தாலியரின் பாடுகளைப்பற்றியும் கவிதைகள் இயற்றி அத்துயரங்களை நிவர்த்திக்கவும் பிரயத்தனப் பட்டாள்.

ஃ

எலிஜபெத்தின் லண்டன் நகர வாசத்தில் ரோபர்ட்டு என்ற புலவருடன் பழக நேர்ந்து, இருவரும் ஒருவரை யொருவர் காதலித்தனராக, அந்தக் காதலுக்குத் தன் தந்தை இணங்காரெனக் கண்டு அவருக்குத் தெரியாமலே 1846-ம் வருஷம் செப்டம்பர்மாதத்தில் ரோபர்ட்டைமணம் புரிந்து கொண்டாள். இதை யறிந்த பிதா எலிஜபெத்தின் மீது கனத்த கோபம் கொண்டார். எலிஜபெத் தன்னை மன்னிக்கும்படி வரைந்த கடிதங்களைப் படிக்காமலே திருப்பி விட்டார். தந்தையின் மூடத்தனமான கோபம் பெருகிக் கொண்டேயிருந்தது. எத்தனைக் கலாவல்லவர்களாயினும் அவர்களின் வீட்டில் மிக மிக இழிவாய்க் கேவலப்படுத்தப்படுவதும், மதிப்பின்றிநடப்பிப்பதும், துவேஷிப்பதும் எங்குங் காணும் ஸம்பவங்களே. ஃ

எலிஜபெத்து தனது விவாகத்திற்குப் பிறகு கணவனோடும் இத்தாலி நாட்டில் வசித்து வந்தாள். முன்பு தனித்துக் கிடந்த வாழ்க்கையிலும், கணவனோடு வாழும் வாழ்க்கை அவள் மனதிற்கு மிக்க ரஞ்சிதமாயும் உயர்வாயுமிருந்ததாகக் கூறியிருக்கின்றான். ஃ

எலிஜபெத் எழுதிய மற்றொரு காவியம் "அரோராலே" என்பதாம். இது ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது. மூன்று வருஷகால உழைப்பில் இது நிறைவேறியது. தனது ஜீவியகஷ்ட சுகஅநுபவங்களையே அக்

தற்கொலை செய்துகொள்வது ஒரு பெரிதல்ல. அதற்கு இடம்தாமல் தன்னைச் சமாளித்துக் கொண்டு அடக்கிச்செல்லும் சக்தியே மகா பெரிது.

காவியமுற்றிலும் நிறைத்துள்ளார். 1859-ம் வருஷத்தில் இத்தாலியாது சுதந்தரக்கிளர்ச்சியின்போது அவர்கட்குப் புது ஊக்கம் புகட்டும் கவிதைகளை யியற்றிக் கனத்த தூண்டுதல் தந்தாள். இங்ஙனம் பெரும் புகழ் படைத்த இவ்வம்மையார் 1860-ம் வருஷத்தில் கனத்த பிணியுற்றுத் தனது பர்த்தாவும் தன் குமாரனும் பரிதபிக்க இவ்வுவகினின்றும் நீங்கினர். ஃ

கவித்வ நிபுணர்களான இந்த ஸதிபதிகட்குள் பன்னெடு நாட்களாக நிகழ்ந்த கடிதப் போக்குகளை யெல்லாம் ஒன்றுசேரத் திரட்டி, அவர்கள் இறந்த வெகு காலத்திற்குப் பிறகு 1899-ம் வருஷத்தில் இரண்டு பாகங்கள் கொண்ட பெரிய நூல்களாக வெளியிட்டனர். அது மிக்க அபூர்வமானதாகும். படிப்பு என்ருல் இதுவல்லவோ படிப்பாகும்.

---

பிறவியுடன் உண்டாகும் கோளாறுகளில் அங்கஹீனங்கள் மட்டுமல்ல, ஒழுக்கக் குறைவுகளும் வேறே யுள்ளன. ஒருவன் காமலோலனுகவே பிறந்து விடுகின்ருன். அத்தகையோன் எவ்வளவோ உயர் நிலையில் உத்தம புருஷனுய் விளங்கினாலும், அவனது காமதத்துவம் அவனை அவ்வப்பொழுது ஆட்டிவைத்து எத்தனையோ விபசாரங்களுக்குத் தூண்டி விடுகிறது. அவனிடமே பல நங்கையரும் வசமாகிருர்கள். எந்த விபசார சங்கதியும் வெளிக்கு வாராத அவ்வளவு பக்குவாய் நடந்து விடுகிறது. ஊராரோ அவனைத்தான் தங்க விக்கிரகம் என்று கொண்டாடுகிருர்கள். இப்படியும் உண்டா இல்லையா?

## நிச்சய புத்தி யில்லாதவர்கள்.

சிலர் இந்த வருஷம் ஒரு பத்திரிகையை வாங்குவதும் அடுத்த வருஷம் அதை நிறுத்தி வேறொரு பத்திரிகையைக் கொள்வதும், அதற்கடுத்த வருஷம் அதையும் நிறுத்தி இன்னொன்றைப் பெறுவதுமாய் உறுதியான மனமில்லா திருக்கிருர்கள். ஒரு வருஷகாலம் ஒரு பத்திரிகையை வாசித்து ருசி கண்டபின் அதை எப்படி விட்டு விடமனம் வருகிறதோ வியப்புதான்! பழய பத்திரிகையையும் வாங்கிக்கொண்டு புதுப் பத்திரிகை யொன்றையும் அதற்குமேல் தருவித்துக் கொள்வது சிலாக்கியமாகும். புத்திமான்களா யுள்ளவர்கள் ஒரு பத்திரிகைக்கு அவர்கள் சந்தாதாரர்க ளானதும், ஆயுள் முழுதும் அதைக் கைவிடாது ஆதரித்து ஆநந்திக்கிருர்கள். இத்தகையோர் தமக்கும் பத்திரிகா உலகிற்கும் நலத்தைச் செய்வோராய் எண்ணப்படுவார்கள்.

# "எல்லைப்புறக் காந்தி"



"எல்லைப்புறக் காந்தி" என்று அழைக்கப்படும் கான் ஸாகிப் அப்துல் காபர்கான் இப்பொழுது இந்தியாவில் அனைவராலும் மதிக்கப்பட்டுப் பெருமை பெற்று வருகின்றார். இவர் உத்மான்ஸா என்னும் கிராமத்தில் 1891—ம் வருஷத்தில் பிறந்தவர். எனவே, இவருக்கு இப்பொழுது 35—வயது ஆகிறது. இவரது குடும்பம் மிக்க பிரபலமுடையது. இவரும் இவரது ஸகோதரருமே முதன் முதல் ஆங்கில பாஷையைப் பயிலத் தொடங்கியவர்கள். பிரவேச வகுப்பு வரையில் கல்வி பயின்றார். 1916—ம் வருஷத்தில் இஞ்சினீயரிங் கல்வி கற்பதற்கு இங்கிலாந்துக்கு அவரை அனுப்ப நினைத்தும் நிறைவேறவில்லை. ஆனால், மதக்கல்வியில் தேர்ந்தவரானார்.

ஃ

டிரிபோலியில் இத்தாலியர்கட்கும் துருக்கியர்களுக்கும் போர் நிகழ்ந்தபோது துருக்கியருக்கு சகாயம் செய்யும் முயற்சியில் தமது 21-ம் வயதில் பொதுவாழ்வில் புகுந்தார். மறு வருஷம் அவர் ஒரு தேசிய கல்விச்சாலையை ஏற்படுத்தி நடத்தினரேனும், அதிகாரிகள் 1915—ம் வருஷத்தில் அதனை மூடிவிட்டனர். அதிலிருந்த ஆசிரியர்களும் கைது செய்யப்பட்டனர். இவர் கைதியாகாமல் எவ்வளவோ கஷ்டத்துடன் தப்பினார். அதன்பின் ராஜீய ஞானத்தை ஜனங்களிடையே வியாபிக்கச் செய்யும் முயற்சியில் இறங்கினார்.

ஃ

மகாத்மாஜீயை அவர் தெரிந்து கொண்டது 1919—ம் வருஷத்தில் தொடங்கிய ரௌலட் சட்டக் கிளர்ச்சியின் போதாகும். தமது கிராமமான உத்மன்ஸாவில் இரண்டு கூட்டங்களை அவர் ஏற்பாடு செய்யப்போக, அதிகாரிகள் சினந்து ராணுவ அமுல் ஏற்படுத்தி எல்லாருடைய ஆயுதங்களையும் கைப்பற்றிக்கொண்டு இவரோடு 140-பேர்களைக் கைதுசெய்து, அந்தக் கிராமத்திற்கு 30-ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்து அதில் ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் வசூலித்தும் விட்டனர். கைதியானோர் 3-4-மாதங்களுக்குப்பின் விடுதலை கொண்டனர்.

ஃ

பிறகுஒத்துழையாமையைமகாத்மா தொடங்கினராக, அதில் எல்லைப்புறக் காந்தியாரும் சம்பந்தப்பட்டு 3-வருஷ கடுங்காவல் சிக்ஷை பெற்றார். பின் விடுதலையானதும் கான்பூரில் கூடிய காங்கிரஸுக்கு வந்திருந்து, அன்று முதல் இந்தியாவின் ஸம்பவங்களில் சிரத்தை யுள்ளவராகி, 1928-ம் வருஷத்தில் லட்சுமணபுரியில் மகாத்மாவின் தரிசனம் பெற்றார்.

ஃ

---

பெரிய ஸ்தானங்களில் இருப்பவர்கள்கூட தங்களைச் சுற்றியுள்ள அற்பர்களுக்கு அஞ்சி எக்காலத்திலும் ஜாக்கிரதையாக இருக்கும்படி நேரிடுகிறது.

எங்கும் வித்தியாப்பியாஸத்தைப் பரவச்செய்வதும், ராஜீய ஞானத்தில் ஜனங்கள் தேர்ந்து முன்னேறுமாறு செய்வதும் எல்லைப்புறக் காந்தியாரின் நோக்கங்களாகும். அறியாமைப் பேயை அகற்றி விடவேண்டு மென்பதும் அவரது நிர்ணயம். அதற்கென்று அஞ்சுமனே இஸாகுல் ஆப்கானு என்ற வித்யா ஸ்தாபனத்தை 1922-ம் வருஷத்தில் ஏற்படுத்தினராக, அதின்கீழ் 26-தேசீயப் பாடசாலைகள் நடைபெறுகின்றன. அவற்றில் 2000 மாணவர்கள் கல்விபயின்று வருகின்றனர். இதில் முதன் முதல் ஆரம்பித்தது 1921-ம் வருஷத்தில் ஏற்பட்ட அசாத் தேசீய நடுத்தரக் கல்விச்சாலைதான். இவற்றின் மீது அதிகாரிகள் அதிருப்தி கொண்டனராயினும் அவை நன்கு நடைபெற்று வருகின்றன. ஃ

1929-ம் வருஷத்தில் பூரண சுயேச்சையையே லக்ஷியமாகக் கொண்டு ஆப்கன் ஜீர்கா சபையை ஏற்படுத்தி, அதன் கிளைகளை ஜில்லாக்கள், கிராமங்கள்தோறும் ஸ்தாபித்து அதன்மூலம் ராஜீய ஞானத்தை ஜனங்களிடை வியாபிக்கச் செய்தார். சிவப்புஉடையுடன் தொண்டர்கள் இந்த ஊழியத்தைச் செய்து வருகின்றனர்.

ஃ

ஆப்கானியர்கள் கலகப் பிரியர்களாய் இரத்தம் சிந்துபவர்கள். அன்னோரை அஹிம்ஸா தர்மத்தில் பற்று கொள்ளும்படி புது உருவகப் படுத்திவிட்டதானது எல்லைப்புறக் காந்தியின் விசேஷித்த வெற்றியாகும். சத்தியாக்கிரகப் போரில் எல்லைப்புறக் காந்தியும் கைது செய்யப்பட்டார். பின் இர்வின்—காந்தி ஒப்பந்தத்தின்படி விடுதலையானவர்களில் அவரும் ஒருவராவர். விடுதலையானதும் கராச்சி காங்கிரஸுக்குவந்திருந்து ஆஜானுபாகுவான அவர் கதர் உடையுடன் ஜ்வலித்து அனைவருடைய மனத்தையும் கவர்ந்தார். விவாகம்போன்றவற்றில் ஏராளமாய்ச் செலவிடுவதைத் தடுப்பது முதலாகிய ஸமூக சீர்திருத்தங்களில் அவர் ஊக்கத்துடன் முயன்று வருகின்றார். "நல்லார் குணங்களை யுரைப்பதுவும் நன்றே".


மனைவியின் போர் தளாமல் மனது புண்ணாகி நொந்து போனவன் அவள் தன் தாய் வீட்டுக்குப் போய் வருவதாகக் கூறினால் உடனே புறப்பட்டுச் செல்லும்படியும், சீக்கிரமே வந்து விடாமல் மனம்போல் இருந்து வரலா மென்றும் சொல்லியனுப்பி விடுகிறான். மனைவியின் பிரிவுக்குச் சற்றும் வருந்துவது கிடையாது. ஹாயியாக வீட்டுக் கலகமின்றிப் பொழுது போக்கவும்முடிகிறது.

கோபம் கலகம் சமயங்களில் உண்டாகிற ஆலோசனைகளும், தீர்மானங்களும், சபதங்களும், ஹோட்டலில் புசிப்பை வைத்துக்கொள்கிறதென்ற எண்ணங்களும் பிறகு உறுதியடைவதில்லை. ஆனால், சிலர் கடைசிவரையும் தங்களின் வைராக்கியத்தைச் சாதித்துக்கொள்ளுகிறார்கள். எனினும், அதில் கண்ட லாபம் ஏதுங் காணோம்! ஆயினும், அவர்களின் திடசித்தத்துக்குப் பாராட்ட வேண்டியதே.




1. காரிய நெஞ்சு :—அடுத்த வீட்டுக் கமலம் காய்ச்சல் கண்டு அவதிப்பட, பக்கத்து வீட்டுப் பாப்பா எட்டியும் பார்ப்பதில்லை. குணப்பட்ட பிறகோ அன்பு கசிந்து நடித்துக் கூடிக்கொண்டு வீட்டுப் பண்டங்களை இரவல் கேட்க வருகிறாள். பாப்பாவின் காரிய நெஞ்சைக் கமலம் அறிவதே யில்லை.

2. பத்திரிகை கிழிபடுதல் :—கேட்கிறாரே என்று தரப்போக, அதை அவர் நுனிப்புல்மேய்ந்து ஒரு மூலையிற் போட, அவரது குழந்தை பல பக்கங்களைக் கிழித்துத்தொலைக்க, பிறகு தந்த நாமே வீடு தேடிச்சென்று கேட்க, கிழிந்து நசுங்கிய பத்திரிகையை எடுத்துக் கொடுக்கிறார். தந்து மனஸ்தாபப்படுகிற சங்கதி யிது.

3. மனங் கோணுதல் :—பல மாதங்கள் கழித்து வந்தானே! இந்தா என்று என் பிள்ளைக்கு ஏதாவது வாங்கிவந்து தந்தானா?—ஒரு ரூபாயாவது போகும்போது கொடுத்தானா? தண்டத்துக்கு ஆக்கி அவனுக்குக் கொட்டினேன் என்கிறாள் ஓர் மாது.

4. அனுதாப நடிப்பு :—வெளியூரிலிருந்து மரணம் கேட்டு ஓடி வந்தவனிடம் முதலில் அனுதாப வார்த்தை கூறல். பிறகோ, அவன் எவ்வளவு பண்ம் தேடி வந்திருக்கிறான், என்னென்ன வாங்கிவந்துள்ளான் என ஆராய்தல். தனக்கு ஏதாவது கிடைக்காதாவென எதிர்நோக்குதல். இதுதான் அனுதாபமோ?

D. M. பிள்ளை.

## II

5. குருட்டு அதிர்ஷ்டம் :—புத்தியோ மட்டம்; கல்வியோ முழு மொட்டை. வியாபாரமோ பிரபலம். பணமூட்டையுடன் சுகவாழ்வு. வெகு யோக்கியனும் தீரனுமானவனுக்கோ வியாபாரம் ஒன்றும் நடைபெறுவதில்லை. செலவுக்கே திண்டாட்டம். இவ்விதம் ஏனோ?

6. வியாபாரம் :—வியாபாரச் சரக்கில் பல தினுசுகள் இருந்தால் தான்வந்தவர்களுக்குக் காட்டி வசிகரப்படுத்தி விற்கமுடியும். இரண்டு தினுசு மட்டுமே வைத்திருப்போருக்கு வியாபாரம் நடப்பதுமில்லை; விற்றுவந்த பணம் கடை வாடகைக்கே போதாததாக, இவர்கள் வியாபாரம் செய்து லாபமடைவதெங்கே?

7. வாங்கிய கடன்:—அப்போது நடந்த ஜோரான வியாபாரத்தில் இன்னும் அதிக விமரிசையாய்க் கடையை நடத்தக் கடன்வாங்கி விடுகிறான். பிறகு காலம் மாறி வியாபாரங்குறைய, கடனோ வட்டியுடன் ஏற, பிறகு கடைச்சரக்குகள் கடன் கொடுத்தோர் வசமாகிறது.

8. இரவல் சமர்த்து:—அர்ஜெண்டான கிராக்கி யென்று நகை வியாபாரியிடம் விற்பதற்கு நகைகள் பெற்றுப்போய்க் கல்யாணப் பெண்ணுக்குப் போட்டுக் காரியமானதும், நகைகளை வியாபாரியிடம் அதிக விலை யென்று வாங்க மறுக்கிறார்களென்று சொல்லிக் கொடுத்துவிடுவோரு முண்டு.

9. சீக்கிரம் கேள் :—விற்கத் தந்த நகைகளுக்கு ஒரு வாரம் அல்லது பத்து தினங்களுக்கு மேல் பொறுத்துக்கொண்டிராதே. விற்ற பணமோ, விற்காவிடில் நகையையோ உடனே பெறப் பார். அதிக காட்ப டின் அந்த நகை அடகுக்கோ அல்லது விற்ற பணம் சொந்தத்தில் செலவாகியோ போயிருக்கலாம்.

10. ஸஞ்சல ஸஞ்சீவி:—பலதொல்லையில் சிக்கி சஞ்சலமாயிருக்கும் சமயம் ஒரு புல்லாங்குழல் கச்சேரி கேட்பது எவ்வளவோ உற்சாகம்! அதைவிட அதிக ஆநந்தம் நம் அருமைக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொஞ்சுவதில் ஏற்படுகிறது.

வ. கு. நாராயணசாமி செட்டியார்.

## III

11. வீட்டு வாடகையைப் பெறுவதில்மட்டும் கண்டிப்பு. ஆனால், சில சௌகரியம் செய்து தரும்படி கேட்கும்போதுமட்டும் வாய்திறப்பதில்லை.

12. பார்ப்பதற்குக் கௌரவம் தான். உள் நுழைந்தாலோ நாறுகிற குப்பைகளெல்லாம் தெரிகிறது.

13. அவனுக்குத் தெரியாமல் காரியத்தைச் செய்துவிட்டதாய் இப்போது குதித்தாலும், பிறகு அவன் அறிந்துவிட, அதனால் படும் அவமானமும் பணச்செலவும் கொஞ்சமா?

14. ஒரேசமயத்தில் எல்லாம் வந்து குவிந்துவிடும்; அப்போது எல்லாப் பாக்கிகளையும் கொடுத்து விடலாமென நினைப்பது தவறு. எதிர்பார்த்தது வாராமலே போய்விடலாம். சிறுகச் சிறுகக் கொடுத்துத் தீர்த்துச் செல்வதே சரி.

P. R. நாராயண சர்மா.

## IV

15. முதலில் பணம் தராதே. சாமான்களைப் பெற்றபிறகு கடைக்காரனுக்குப் பணம் கொடு. முதலிலேயே தரின் பிறகு கடைக்காரன் தான் பணம் வாங்கவில்லை யென மறுக்கவும் கூடும்.

16. உத்தமனொருவனுக்குத் தான் எங்கிருந்தோ ஒரு கோணல் கட்டை மனைவியாக வாய்க்கிறாள்.

17. சந்தேகியின் மனம் சாந்தமடைவதில்லை. பின்னும் பலவித சந்தேகங்களே கொள்கிறான். சந்தேகியின் மனமும் அலைகடலும் ஒய்வதேது? அதிலும் தன் மனைவியிடத்துச் சந்தேகமோ? ஐயோ ஈசா!

18. கணவனின் வீடு சென்று பல்லாண்டுகளாகியபின்பு, பிறந்தகத்து ஆசையால் அண்ணன் வீடு செல்ல, அண்ணியோ அவர்களுக்கு மாத்திரம் அளவாய்ச் சமைத்துப் புசித்துவிட்டு, என்னை வேறு சமையல் செய்து சாப்பிடும்படி சொன்னாள். என் பெற்றோர் இருந்தால் இங்ஙனம் நடக்குமாவென அங்கலாய்க்கிறாள் ஒரு வநிதை. ப. குருவிவேல்.

## V

19. வீட்டில் பக்ஷணங்களும் பதார்த்தங்களும் இருக்கும்போது விருந்து எதுவும் வருவதில்லை; பசியும் இல்லை. ஒன்றுமில்லாத்

---

துன்மார்க்கர்களின் இருப்பிடம் என்று தெரிந்துங்கூடப் பழய அபிமானத்தை மறக்கமுடியாமல் அங்கு போகிறான். ஆயினும் அவர்களின குணம் பிடியாமல் சீக்கிரத்திலே மனம் வெறுத்துத் திரும்பிவிடுகிறான். சிலாது மனம் எத்தனைத் துற்சுந்தங்களின் இடையில் இருந்தாலும் கெடுவதில்லை.

போதோ விருந்தும் பசியும் கூடிக் கொள்கிறது

20. தன் குமார்த்தி மாமி வீட்டி விருந்து பக்ஷணவகைகளும் பல சாமான்களும் கொண்டு வந்தால் அதற்கு ஆனந்தப்படுகிறவள், தன் மருகி தாய் வீடு செல்லுகையில் ஏதாவது கொண்டு சென்றால், எல்லாம் எடுத்துக்கொண்டு போய்விட்டாளே, என் மகன் தலையை மொட்டையடிக்க வந்திருக்கிறாளே யென்று ஆத்திரப்படுவதேனோ?

V. R. நடேசன்.

VI

21. பிறரைப் பரிகாசஞ் செய்வோர் தங்களை எவரேனும் பரிகாசஞ் செய்தால் மட்டும் பொறுக்காததேன்? பிறரிடம் தாங்கள்மட்டும் சுதந்திரம் எடுத்துக்கொள்ளலாம்; பிறர் தங்களிடம் மட்டும் சுதந்திரம் எடுத்துக் கொள்ளலாகாதோ?

22. தன்னைப் புகழும் காதலியின் மனம் மகிழ அவள் முன்பு எத்தகைய காரியத்தையும் செய்யத் துணிகிறான் காதலன். பெண் தூண்டுதலுக்கே ஒரு தனித்த சக்தி உண்டுபோலும்!

23. மனசாட்சியின்படி வாக்காலும் செய்கையாலும் நடப்பவர்கள் ஒருபோதும் ஒருவருக்கும் அஞ்சார். அவர்களுக்குக் கடவுளே சாக்ஷியாக இருக்கிறார்.

24. பெருமையில் மயங்கியவர்கள் தங்களின் மனசாக்ஷிக்கு மாறாகத் தாங்கள் கூறுவதும் செய்வதுமே சரியென்று வாதாடுகிறார்கள்.

25. காதல் தீ மிகக் கொடிது. அதில் பொறாமை யென்னும்நெய்யை ஊற்றிவிட்டாலோ?

26. நாம் அந்த நண்பர்களிடம் எவ்வளவோ உயிருக்குயிரான அன்பு காட்டி வந்தும், இறுதியில் அவர்கள் திடீரென்று வந்து மூளக்கும் ஒரு வினைக் கண்டதே நம்மை அறவே மறந்துவிடுகிறார்கள்.

27. தங்கள் மூடத்தனத்தையே பெருமையாய் மதித்துக்கொள்கிறவர்களுக்குத் தாங்களே பட்டபின்புதான் புத்தி வருகிறது.

28. நாம் அவர்களிடம் எவ்வாறு நடந்துகொள்கிறோமோ, அவ்வாறு அவர்கள் நம்மிடம் நடந்துகொள்வதில்லை. ஏன்? உலகம் பலவிதம்.

29. அவர்கள் இருவரும் சந்திக்கும்போதெல்லாம் கடகடவென்று வார்த்தைகளைக் கொட்டிக் குழறி வாதித்துப் பின்பு சுடுசொற்கள் வழங்கி மனம் புண்பட்டுப் பிரிகிறார்கள். இது என்ன சந்திப்போ?

30. நாயகன்மீதுள்ள வெறுப்புக்குக் குழந்தைகள்மீதா அடித்துக் கோபம் காட்டவேண்டும்?

31. உலகில் வீரம் பேசுவோரெல்லோரும் பிரமாத வார்த்தைகள் கூறி நழுவுகிறார்களேயொழிய வீரச் செயலுக்கு முன் வருவதில்லை.

32. ஒரு வாலிபனுக்கும் மங்கைக்கும் உண்டாகும் சாதாரண அன்பு நாளடைவில் காதலாக மாறுகிறது.

33. எவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருப்பினும் அன்பு உள்ளத்

---

வீட்டில் பெரியவர்கள் இல்லாவிடில் அங்கு வாழ்க்கைப்படவந்த பெண்கள் நல்லொழுக்கம் கற்கவும் வணங்கித் திருந்தவும் வசதியின்றித் தங்கள் கணவனுக்கு எமனாகவும் முடிகிறார்கள். இப்படியும் சில குடும்பங்களில் உண்டு. உத்தமிகள் எந்த வறுமைக்காலத்திலும் உத்தமிகளே.

தினருக்கு மனம் சலிப்பதில்லை. நேரம் போவதும் தெரிவதில்லை.

34. தங்களுக்கு இஷ்டமான பொருளைக் கணவர் வாங்கித் தரும்போது புகழ்வது; தராதபோதோ முணுமுணுத்துத் தூற்றுவது.

35. ஆடவர் தாசியை நம்புவதானது ஆடு கசாப்புக்கடைக்காரனை நம்புவதுபோலாம்.

36. இரவற் பொருளை அதற்குடையவரிடத்தில் திருப்பிக் கொடுத்து மகிழ்வதுபோல, புத்திரிரத்தினத்தை அவளுக்கேற்ற கணவனிடம் சீர்வரிசைகளோடும் ஒப்புவித்துப் பெற்றோர் மகிழ்கிறார்கள்.

த. சு. சங்கரலிங்கம்.

[இந்த அன்பரைப்போல் மற்றவர்களும் விஷயங்களைச் சுருக்கி வரைவது நலம். ப-ர்.]


பிருதுவி,
அப்பு, தேயு,
வாய்வு, ஆகாசம்
—என்பன பஞ்ச பூதங்கள். இவற்றாலுண்டாயது சரீரம். நமது தேகத்தில் சூடு உண்டு. ஜலம் உண்டு. மண் உண்டு. காற்று இருக்கிறது ஆகாசம் உண்டு. ஆதலின் இந்த சரீரத்திற்கு பூதவுடல் என்றுபெயர்வந்தது. இந்த சரீரமாகிய வீட்டின் மத்தியில் ஹிருதய கமலமொன்றுண்டு. இதில்பிராணன், அபானன் ஆகிய இரண்டு வாயுக்கள் சேர்ந்து காரியங்களைச் செய்கின்றன.

## VII

37. நேச அபிநயத்துடன் உன்னிடமிருந்து உன் ஆபீஸின் அந்தரங்க விஷயங்களைச் சிலர் அறிய முயலுகையில் அதற்கு நீ இடம் தராதே. அது உன் வேலைக்கே பெரிய கெடுதி.

38. காமத்துக்குத் தாசர்கள் ஏற்படுவதும், அவர்களிடம் பணம் தந்து ஏமாறுவதும் ஒரு விநோதம்.

39. இருவருக்கும் ஒரே புஸ்தகம் வி. பி.யில் வந்தால், தனக்கு வந்த வி. பி.யைத் திருப்பிவிட்டு, வி.பி.யைப் பெற்ற மற்றவனிடம் போய், நீதான் வாங்கினாயே, நானும் என் வாங்க என்று வி. பி.யைத் திருப்பிவிட்டேன்; எங்கே அந்தப் புஸ்தகத்தைஎடு, படித்துவிட்டுக் கொடுத்துவிடுகிறேன் என்று பெற்றுப் போய்விடுகிறார்கள். புஸ்தகம் பாழ்பட்டுத் திரும்புகிறது.

40. உன்னிடமுள்ள அகப்படாத புஸ்தகங்களைப் பிறருக்குச் சொல்லாதே. சொன்னால் இரவலில் தொலைந்துவிடும்.

41. சிநேகம் செய்யவருகிற உத்தியோகஸ்தர்களிடம் உஷாராகஇரு. தங்கள் காரியத்துக்கே அவர்கள் நேசம்பிடிக்கிறார்கள்.

42. சிலரிடம் நேசமாயிருப்பதைவிட, அவர்களுடன் சண்டையிட்டுக் கொண்டு விரோதமாயிருப்பது மிகவும் மேலென்று தோன்றுகிறது.

V. R. இராமநாதன்.



# மூளைக்கு விருந்து.

1. ஓர் ஊருக்கு மூன்று மரக்கலங்கள் நிறைய அரிசி மூட்டைகள் ஏற்றிப் போகிறபோது முதல் மரக்கலக்காரன் இரண்டாவது மரக்கலக்காரனை கூவி என்னுடைய மரக்கலத்தில் பாரம் அதிக மிருப்பதனால் என்னிடமிருந்து சில மூட்டைகளை வாங்கிக் கொள் என்றான். என் மரக்கலத்தில் எவ்வளவு மூட்டைகள் இருக்கிறதோ அவ்வளவே வாங்கிக்கொள்வேனென்று அதன்படி வாங்கிக் கொண்டபின் இரண்டாவது மரக்கலக்காரன் மூன்றாவது மரக்கலக் காரனை அழைத்துத் தன்னிடமுள்ள சில மூட்டைகளை வாங்கிக் கொள்ளும் படி கேட்டான். அவனும்தன் மரக்கலத்திலெவ்வளவு மூட்டைகளிருக்கிறதோ அவ்வளவே வாங்கிக் கொண்ட பின் மூன்று மரக்கலங்களிலும் மூட்டைகள் சரியாக விருந்ததென்றால் முதன் முதலில் ஒவ்வொரு மரக்கலத்திலுமிருந்த மூட்டைக ளெத்தனை ?:—

2. இரண்டால் வகுத்தால் மீதியில்லாமலும், மூன்றால் வகுத்தால் மீதி யில்லாமலும், நான்கால் வகுத்தால் மீதியில்லாமலும், ஐந்தால் வகுத்தால் மீதி யில்லாமலும், ஆறால் வகுத்தால் மீதி யில்லாமலும், எழில் வகுத்தாலும் மீதி யில்லாத ஓர் தொகை சொல்லுக ?

3. தினமும் தங்கத்தா லமையும் மண்டபமெது ?

4. நடுவெழுத்து வினு:—1. சனக நகரின் பெயர். 2. அநுமான் பெயர்; 3. பார்வதி பெயர்; 4. பெண்சாதி பெயர்; 5. ஓர் அவயவப் பெயர்; 6. ஓரிராகப் பெயர்; இப்பெயர்களின் நடு வெழுத்தால் ஓர் ஸ்தலப் பெயர் வரவேண்டும் ?

5. எட்டு எழுத்திலோர் ஸ்தலப் பெயர்:—1-ம், 2-ம், சேரில் செல்வம், 3-ம், 4-ம், சேரில் குளம்; 3-ம், 5-ம், 1-ம், சேரில் கங்கை; 3-ம், 6-ம்; சேரில் பெருமை; 7-ம், 8-ம், சேரில் பருகு; இப்பெயரெது ?

6. குள்ள நரிக்கு கால்கள் நாளில்லை
இள்ளைக்கிருபது கால்களுண்டு
ஆலரசு அத்திக்கு துவரில்லை
சிங்கத்திற்கு இறகு. (இதைச் சரியாக வாசிக்கவும்.)

7. வெண்மையான பூமியில் வேகமாய் ஓடுவான்
நோன்மை யற்றால் நின்றிடுவானவன்

சென்னியை அறுத்தால் சத்துவம் பெற்றோடுவான் இவன் யார் ?

8. வெண்மையான காட்டை கறுப்பு விதை கொண்டு கையால் விதைத்து வாயாலறுப்பாரிவர் யார் ?

---

தனக்கு வேண்டியவர்களையெல்லாம் விரோதித்து அவர்கள் நாசமாய்ப் போகட்டுமென்று பிரார்த்தனை செய்துகொண்டு செல்வத்தை ஏராளமாய்க் குவித்துச் செல்வதில் ஆம் பயன் என்ன ? மற்றவர்களுக்குத் தந்து மகிழாமல் அநுபவிப்பதெவ்வாறோ? மனைவி அநுபவியாமல் கணவன் அனுபவிக்க முடியுமா

9. கையை, கை பிடித்து கை மேல் வைத்துத் தின்றதாம். அது எது?

10. சகத்திலுள்ளோர் கத்தி படாமல் சமைக்கும் புலாலெது?

11. தலையில் காலுமிடையில் தசமும்
எல்லையிலில்லும் சேர்ந்தாலென்ன?

12. ஒரு மாவு மொரு நூறு மொன்று மிம்மும்
சேர்ந்தாலென்ன?

13. உலகத்தில் இருபிறப்புடையது எது?

14. பாரினில் பறவா கொக்கும், பாயா வேங்கையுமுண்டோ?

சு. க. பிச்சைமுத்துராஜா.

[இதற்கு விடை அடுத்த ஸஞ்சிகையில் வருமாதலின் எவரும் விடை எழுதி அனுப்பவேண்டாம். ப-ர்.]

## புஸ்தக இரவலில் ஒரு சமர்த்து!

ஊருக்குப் புறப்படுகிற சமயத்தில் ஒரு முக்கியமான புஸ்தகத்தை இரவல் கேட்டுப் பெற்றுத் தங்கள் வீட்டிற்குக் கொண்டுபோய்ப் பத்திரமாக வைத்து விடுகிறார்கள். அதை அவர்கள் படிக்க அவசரப் படுவதில்லை. பிரயாண அவசரத்தில் தங்களிடம் புஸ்தகம் கொடுத்ததை மறந்து போகட்டுமென்று இவர்கள் எண்ணம். இவர்களும் பிறகு எதிர்ப்படுவதில்லை. புஸ்தகமும் திரும்பி வருவதில்லை. தந்தவனோ இவர்களைக் காணோமே யென்று ஏங்குகிறான். ஒரு சமயம் தப்பித்தவறி எதிர்ப்பட்டு விட்டால், ஓ! மறந்து போனேனே, தபாலில் அனுப்பி விடுகிறேன் என்று சொல்லிச் சமாளித்துவிடுவார்கள். சிலர் இதோ கொண்டு வருகிறேனென மறைவர். இந்த சண்டாளர்களிடம் பதிலுக்குப் பதில் சொல்லவும் நேரமின்றி வண்டி ஏறும்படி நேர்கிறது. புஸ்தகம் பிறகு வருவதேயில்லை. போனது போனதே!

அக்கிரமமாய்த் தேடிய செல்வம் பிந்திய காலத்தில் அதற்கு வாரீசுகள் இல்லாமலும் அழுது புலம்பும். நடுவழியில் வருபவன் அதை அநுபவிக்கும் படியாகவும் ஆகும். இப்படியே பல இடங்களில் நடந்து மிருக்கிறது.

நம்பியவனை ஏமாறவிட்டு, மற்றோரிடத்தில் தன் பெண்ணைக் கொடுக்கப் போக, நம்பியவனோ கதறி நோக, அவன் சாபமோ யாதோ அப்பெண் எவ்வளவோ சொத்திருந்தும் மலடியாகவே காலந்தள்ள விதிவசம் நேர்கிறது.

விவேகம்
விநோதம்
விசித்ரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரிய
ஆநந்தம்

# போனவரு! வந்தவரு! போகிறவரு!



யாரப்பா இந்தத் திரிமூர்த்திகள்? இந்த மூவரிலே போனவரு யாரு? வந்தவரு யாரு? போகிறவரு யாரு? எங்குபோனுர்? எவர் வந்தார்? எதற்காகப் போகிறுர்? போனவரின் சங்கதியை முதலில் விகடன் சொல்லுகிறேன். அவர் பேர் எல்லோர் வாயிலும் வழங்கி வந்ததுதான். எல்லா கவர்னர் அப்பாக்களுக்கும் பெரிய அப்பாவாக இருந்து இங்கே ஆண்டுவந்தாரே—அந்த லார்ட் இர்வின் பிரபு—அவர் தமது இராஜப்பிரதிநிதி பதவியிலிருந்தும் விலகிக்கொண்டு சுயதேசம் போன சங்கதியையே விகடன் பேச எழுந்தேன்.

ஃ

பழய பெரிய அப்பா இர்வின் பிரபு ரொம்ப நல்லவரு தான். என்ன நல்லவரு ஆனுலும் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் போட்டு விடுகிற ஒரு திட்டத்துக்குள்ளாகத் தானே இருந்து கொள்ளவேண்டி யிருக்கிறதானதால் எதையும் தாராளமாய்ச் செய்வதற்கில்லை. வீட்டுக்கார மனுஷ்யர் நல்லவரு ஆனுலும், வீட்டுக்குள்ளிருப்பவர்களின் அதிகாரங்கள் தானே பெரிசு! அவர்கள் வைத்தது தானே சட்டம்! அப்படியே இந்தப் பெரிய அப்பாவின் சங்கதியும் ஆய்ப் போச்சுது!

ஃ

இதன் மத்தியிலே நம்ம காந்தி தாத்தா கல்கத்தா காங்கிரஸிலே வந்து புகுந்து டிசம்பர் மாதம் 31-ம் தேதி நடு இரவுக்குள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து மூட்டையை யெடுத்துக் கொடுக்காவிடில் பரிபூரண ஸ்வராஜ்யத்துக்கே தள்ளுவது என்று ஒரு பீரங்கி முழக்கம் முழக்கினுரு! அதைப் பெரிய அப்பா இர்வினு பிரபு கவலை எறிக் கேட்டாரு! 'எந்த வாக்குப் பொய்த்தாலும் சந்தை வாக்குப் பொய்க்காது; அதிலும் முந்தியே சொல்லிவைத்து, அந்த சொல்லிய படியே நடத்தியும் விடுகிற காந்தி தாத்தாவின் வாக்குப் பொய்யாகாது. இதற்கு எதாவது வழி செய்ய வேணுமே யென்று 'கவலை யுடையாருக்குக் கண்ணுறக்கம் வரா' தென்பதாக அதே விசாரமாய் இங்கிலாந்து போனுரு! 'கல்யாணம் செய்வதும் கதவைச் சாத்துவதும் போல்' அங்கே பலபேச்சுகள் நடந்து ஒரு முடிவாகி, பெரிய அப்பாவும் இந்தியா வந்து, இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து கொடுக்கப் போவதாகப் பெரிய தாராள வார்த்தைகளுடன்

வெளியிட்டாரு! அதை இந்தியத் தலைவர்கள் ஆவலுடன் வரவேற்ருர்கள்! ஆனாலும், இந்தத் தலைவர்கள் பழம் புண்ணுளிக ளாச்சுதே! அதிலும் காந்தி தாத்தாவோ 'அகோர தபசி விபரீத நிபுணன்' என்பதாக மெத்த அவசரப்பட்டவ ராச்சுதே! பழய நாளிலே திலகர் தாத்தா கன்னத்தில் அறைந்தது போல இந்தத் தேசத் தாரைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னரு! நீங்கள் 1856-ம் வருஷ சிப்பாய் கலகத்தின்போது விக்டோரியா மகாராணியாரிட மிருந்து மஹாசாசனப் பத்திரம் பெற்றுக் கொண்டீர்களே! அதற்கு அடுத்த வருஷங்களி லிருந்து தொடர்ந்தாற் போல் முயற்சி செய்து அந்த சாசனப் பத்திரப்படி சுதந்திரங்களைக் கேட்டீர்களா? இல்லையே! சாசனப் பத்திரத்தை வைத்துக்கொண்டு சும்மா இருந்து விட்டீர்கள்! 'அகழிலே விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்ட மென்பது போல' நீங்களும் மகா சாசனப் பத்திரத்துடன் திருப்திபட்டு விட்டீர்கள். அப்படியில்லாமல் சென்ற 50-வருஷங்களாகக் கேட்டு வந்திருந்தால் முந்தியே சுயராஜ்ய மிட்டாயி வந்திருக்குமே என்று சொன்னரு! காந்தி தாத்தா திலகர் தாத்தாவின் குட்டிப்பிள்ளையல்லவா! உடனே பெரிய அப்பா இர்வின் பிரபுவைக் கண்டு எப்போது குடியேற்ற நாட்டு மூட்டை கிடைக்கும் என்று கேட்கப் புறப்பட்டு விட்டாரு! வி. பி. பார்சலிலே வந்தாலும் வாங்கிக் கொள்ளுகிற தென்று தயாராய் விட்டாரு! ஃ

'அக்காடு வெட்டிப் பருத்தி விதைக்கிறேன் என்றால், அப்பா எனக்கொரு துப்பட்டி என்றானாம் பிள்ளை!' அதுபோல எல்லோரும் குடியேற்ற நாட்டந்தஸ்து உடனே கிடைக்கப் போவதாக எண்ணி, அப்படி கேட்கவேணும், இப்படிப் பேசவேணும் என்று பேராவலுடன் காந்தி தாத்தாவுக்குத் தந்தி யனுப்பினார்கள்! கடைசியிலே பெரிய அப்பா இர்வினு பிரபு குடியேற்ற நாட்டந்தஸ்து தரும் சங்கதி பெரிய பள்ளிக்கூடமான பிரிட்டிஷ் பார்லிமெண்டைப் பொறுத்த சங்கதி, தன்னால் அது நடக்காது என்று காந்தி தாத்தாவுக்குப் பளிச்சென்று சொல்லி விட்டாரு! 'பெருங்கயிறு முடி அழுந்தாது', இந்தப் பேச்சில் பயனில்லை என்று காந்தி தாத்தா திரும்பி விட்டாரு! லாகூரில் காங்கிரஸூம் கூடிற்று. பரிபூர்ண சுயராஜ்ய மூட்டை தேவை யென்று முடிவும் பண்ணினாருங்கோ! அதன் பிறகு காந்தி தாத்தா உப்பு சத்தியாக்கிரகமாய் யாத்திரை புறப்பட்டாரு! 'அக்கினிப்பந்தலிலே வெண்ணெய்ப் பதுமை ஆடுமா' என்று காந்தி தாத்தாவைப் பழித்தவர்களும் எவ்வளவோ பேர்! 'அக்கு தொக்கு இல்லாதவனுக்குத் துக்கம் ஏது' என்பதாக இராஜீய விஷயங்களில் சம்பந்தப் படாதவர்கள் இதைப்பற்றிக் கவலைப்படாமல் வேடிக்கை பார்த்தாங்கோ! வாய்வீர அண்ணன்கள் வாயிற்படிகூடத் தாண்டி வெளி வரவேயில்லே! ஃ

'அடங்காத மனைவியும் ஆங்கார புருஷனும் போல' காந்தி தாத்தாவும், பெரிய அப்பா இர்வினு பிரபுவும் ஆனார்கள்! காந்தி தாத்தாவின் சத்யாக்கிரகம் இந்தியா நாடெங்கும் வியாபித்துக்கொள்ளவே, கடைசியில் சமாதானப் பேச்சு தொடங்கினார்கள்!

---

முதலில் ஒருவரை வயிறெரியப் பேசிவிடுகிறது. பிறகு அவரால் நடக்க வேண்டிய காரியங்களுக்கு நெருங்கிவந்து மிகவும் உறவு கொண்டாடுகிறது.

அடிபட்டும் புளித்த மாங்காயா தின்ன வேண்டுமென்று' அந்த சமாதானத்திற்கு காந்தி தாத்தா ஒப்புக் கொள்ளவேயில்லே! சமாதானப் பேச்சு முறிந்துபோச்சு! ஃ

அப்பால் லண்டனிலே வட்ட மேஜை மகாநாடு கூடி இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டந்தஸ்து தர யோசிப்பதாக முடிவுசெய்து முக்கிய தலைவர்களை விடுவித்து சமாதானம் பேச ஒரு முடிவு செய்தாங்கோ! காந்தி தாத்தாவும், சிங்கக்குட்டி ஜவஹர்லாலும் பலரும் சிறையிலிருந்து வெளி வந்து சமாதான முடிச்சு போட்டாங்கோ! இர்வின்-காந்தி உடன்படிக்கை என்று அதற்கு ஒரு பேரும் வைத்தார்கள்! சிறையிலிருந்தவர்களில் முக்கால் பங்கு பேர் விடுதலையானார்கள்! காந்தி தாத்தாவின் சத்தியாக்கிரகமும் தற்காலஏற்பாடாக நிறுத்தப்பட்டது. இதன் மத்தியிலே பகத்ஸிங்கு முதலியவர்களைத் தூக்கு போட்ட கண்ராவி சங்கதியும் நடந்தது! கராச்சியில் காங்கிரஸும் கூடிற்று. காந்தி தாத்தாவையே இங்கிலாந்துக்கு அனுப்புவதென்று முடிவு கட்டிற்று. இதற்குப் பிறகு பெரிய அப்பா இர்வினு பிரபுவும் தமது நாட்டுக்குப் புறப்பட்டு விட்டாரு! இது வரையில் பெரிய அப்பா இர்வினு பிரபுவின் கதை நடந்திருக்கிறது. இது போனவரைப் பற்றிய புராணம்.

ஃ

இனி வந்தவரின் கதையை விகடன் தொட்டுக் கொள்ளுகிறேன். புதிய பெரிய அப்பாவான லார்ட் வில்லிங்டனு பிரபுவை இந்தியாராஜப் பிரதிநிதியாக்கியதும், விகடன் ஓட்டமாய் ஓடி லண்டனில் இந்தியா மந்திரியைக் கண்டு, அதிக வயதானவரை இந்தியாவுக்கு அனுப்புகிற சங்கதி என்னவென்று கேட்டேன்! அதற்கு இந்தியா மந்திரி, அப்பா விகடா! வயது அதிகமானவர்தான் இந்த சமயம் இந்தியாவுக்கு வேணும்; வயதுக்குத் தகுந்த அனுபோகமும் முற்றியிருக்குமல்லவா? பால ஜோஷியம், விருத்த வைத்தியம் என்று கேட்டதில்லையா? மேலும், என் நாட்டார்கள் உன் ஊராரைப்போல பிஞ்சிலே குஞ்சிலே குட்டி போட்டு ஆயுளை முடித்துக் கொள்கிறவர்களல்ல. உழைப்போடு உல்லாசத்துக்கும் வழியைத்தேடி, தேகப்பயிற்சியும் செய்து தீர்க்காயுள் படைத்தவர்கள். எற்கெனவே இந்தியாவைப் பத்து வருஷமாய்ப் பழகி யறிந்துள்ளவரே சரியென்று நியமித்திருக்கிறோம் என்று சொன்னாரு! ஃ

கப்பலேறிப் போய்விட்ட பழய பெரிய அப்பா இர்வினு பிரபுவுக்கு விகடன் வாழ்த்து கூறுகிறேன்! அவர் என்ன பிடிவாதக்காரரானாலும், முடிவில் நல்லவராய் விட்டாரு! பகத்ஸிங் வகைகளைமட்டும் ஜாடையாய் விட்டிருந்தால் இன்னும் ரொம்ப ரொம்ப நல்லவராய்க் கொண்டாடப் படுவாரு! போனவர்போக, இனி வந்திருக்கிற புதிய பெரிய அப்பா லார்ட் வில்லிங்டனு பிரபுவுக்கு விகடன் என் கோணத் தடியைத் தூக்கிக் கொண்டு சலாம் போட்டு ஆசி கூறுகிறேன். இங்கே இரண்டொரு குழந்தைகளும் பெற்றுக் கொண்டு நல்லவராயிருந்து நல்ல வாழ்வு வாழட்டுமென்று லாலி மங்களம் பாடுகிறேன்! இனி எதிர் கால இந்தியாவின் தலைவிதியும், அர

---

வீட்டில்கூட்டம் அதிகமாய்விடும்போது சண்டைசச்சரவுகளும் தொடர்ந்து வேலைகளும் கெடுகிறது. எவராவது விருந்தினர் வந்தபோது செலவு கஷ்டங்களின் அதிகரிப்பில் சதிபதிகளுக்குள் சண்டை தொடங்குகிறது.

சியல் நிலைமையும் இந்தப் புதிய பெரிய அப்பா போடுகிற கயிற்று முடிச்சிலே இருக்கிறது! கண்ணுலத்திலும் கழுத்திலேதான் கயிறு முடிச்சு போடுகிறுங்கோ! தூக்குக் கயிறு முடிச்சும் அந்தக் கழுத்திலேதான் போடுகிறுங்கோ! இதிலே நல்ல முடிச்சு நலமாக இந்தியநங்கைக்குக் கிடைக்கும்படி அந்த கண்ணுக்குக் காணுத கடவுள் சாமி கிருபை பண்ணட்டும்!

ஃ

போனவரின் கதை ஆச்சுது! வந்தவரின் கதையும் ஆச்சுது! இனி போகிறவரின் கதையைக் கேட்கிறீர்களா? நம்ம. காந்தி தாத்தாவுக்கு இப்போது "ஜெகத்குரு" பட்டம் கிடைத்து விட்டதும், அவருடைய சிஷ்யக் குட்டிகள் மெத்த மெத்த ஆரவாரம் அட்டகாசம்செய்கிறுங்கோ! கதர் பிரசாரம் என்றும், காங்கிரஸ் பிரசாரம் என்றும் பல குட்டி சிஷ்யக் கூட்டங்கள் ஊரூராய்க் கிராமம் கிராமமாய்ச் சுற்றி தடபுடல் காட்டுகிறுங்கோ! இன்னும் மறியல் பண்ணி கடைவியாபாரம் நடக்காமல் செய்கிறது வேறே! எல்லை மீறிய பேச்சுகள் வேறே! இப்படியாக எங்கும் அமக்களமாய் இருக்குது! கவர்ன்மெண்ட் பாக்ஷாவும்பொறுத்துக்கொண்டு நிற்கிறுங்கோ! ஆனுல்பம்பாய்க் கவர்னரான அப்பாவுக்கு-இன்னும் எவ்வளவுக்குத் தான் பொறுக்கிறது-என்று மெத்த கோபமாய்ப் போச்சுது! அந்த அப்பா நெஞ்சுக்குள்ளே மறைத்து வைக்கிறவரல்ல! தமது கோபத்தை உள்ளது உள்ளபடி விவரமாய்ச் சொல்லி விட்டாரு! இனி சகிக்க-தாங்கமுடியாது-மீறுகிறவர்களின் மேல் கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் படுமென்று சவுக்கடி கொடுத்து விட்டாரு! கண்டபடி குதித்துக் கும்மாளம் போடுகிறவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கை தான்! ஃ

காந்தி தாத்தாவுக்கும் விகடன் சொல்ல வேண்டிய சங்கதி ஒண்ணு உண்டு; தாத்தா தன் வாயைக் கொஞ்சம் ஜாக்கிரதையாய்க் கட்டி வைத்துக் கொள்ள வேணும்! தரும்மைத் தூணுக்கிப் பிரமாதப்படுத்தி விடுகிறவர்கள் சிலருண்டு! காந்தி தாத்தா, கிறிஸ்துவப் பாதிரிமார் இந்தியாவிலே மதம்மாற்றும்வேலையை—ஆஸ்பத்திரி பள்ளிக்கூடங்கள் முதலிய ஜீவ காருண்ய பரோபகாரச் செயல்களோடு கூட்டி, உள்ளுக்குத் தங்கள் மதத்துக்கு இழுத்துக் கொள்ளும் நோக்கத்தோடு செய்யக் கூடாதென்று சொன்னுரு! இது சாதாரண சங்கதி! அவரவருக்கே மதம் மாறப் பிரிய மிருந்து மாறினுல் அதைப்பற்றிக் காந்தி தாத்தா ஆக்ஷேபிக்கவுமில்லே! வாய் திறக்கவுமில்லே! வஞ்சனையாய், மோசசூழ்ச்சியாய்முன்னே ஜீவகாருண்யத் தூண்டிலைப் போட்டு, பின்னே தங்கள் மதத்துக்கு மீன்களை இழுக்கிற சங்கதி கூடாதென்றே தாத்தா சொன்னுரு! இதிலே என்ன தப்பு என்று விகடனுக்குத் தெரியில்லே! நாளைக்கும் ஹிந்துக்கள் தங்களின் பெண் பெரிசு ஆய்விட்டால் கிறிஸ்தவ பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதைப் பயந்து நிறுத்தி விடுகிருர்கள்! என் தெரியுமா? பாதிரி துரைச்சானிகளும், கிறிஸ்துவவாத்திச்சி அம்மாக்களும் எங்கே தங்கள் பெண்ணைக் கடத்திக் கொண்டு போய் கிறிஸ்து மதத்தில் சேர்த்து விடுவார்களோ என்கிற பயம் தான்! அப்படிப் பெண்களைக் கிறிஸ்துவத்திலே சேர்த்துவிட்ட சங்கதிகளும், ஓ! பெண்

---

எந்தக் காலத்திலும் எந்தப் போதனையிலும் திருந்தாதவர்கள் தங்கள் வயிற்றுப்பாட்டிற்குத் திண்டாட்டம் வந்தபோதுதான் அடங்குகிறுர்கள்.

ணுக்கு வயதாய்விட்டது; அவளைத் தடுக்கப் பெற்றோரால் முடியாது— அவள் கிறிஸ்துவத்தில் சேரப் பிரிய மாய் இருக்கிறாள் என்று வழக்காடிய சங்கதிகளும், எவ்வளவோ பள்ளிப் பையன்கள் கிறிஸ்துமதத்தில் சேர்ந்து திகைத்த சங்கதிகளும் குப்பை குப் பையாக இருக்கிறது ! இப்படி ஏமாற் றிமதம் மாற்றக் கூடாதென்றே காந்தி தாத்தா சொன்னரு. கிறிஸ்து நாத ரின் ஒப்பற்ற தியாகம், பரிசுத்தம் காந்தி தாத்தாவுக்குத் தெரியாதா? இந்த விகடனுக்கும் தெரியாதா? அந்த சங்கதி வேறு! ஏமாற்றி மதம் மாற்றுகிற சங்கதி வேறு ! இது சின் னஞ் சிறிய சங்கதி! நாடெங்கும் தெரிந்து கிடக்கிற சங்கதி! இந்தத் துரும்புப் பேச்சைத் தூணாக்கி, ஓ! இந்தியாவிலேயுள்ள நம்ம கிறிஸ்துவ ஸகோதர்களுக்கு ஆபத்து வந்து விட் டது போலவும், கிறிஸ்துமதத்தைக் காந்தி தாத்தா அழித்துவிடப் புறப் பட்டு விட்டது போலவும், காந்தி தாத்தா போடுகிற சுயராஜ்யத்திட்டத் திலே ஏதேது கிறிஸ்தவர்கள் சுகமாக வாழவே முடியாததாகவே ஆகிவிடு மென்பது போலவும், இந்தியாவிலே உள்ள கிறிஸ்துவர்களெல்லாம் பெரிய பெத்தக் கூக்குரல் போட்டு காந்தி தாத்தாவை எதிர்க்கா விட்டால் ஆபத்தே என்பது போலவும் நீள நீள மாய்த் திரித்துக் கதை கட்டி விட் டார்கள் ! லண்டனுக்கும் தந்திகள் பறந்துவிட்டன ! அங்கிருந்து, ஓ ! காந்தி தாத்தா எப்படிப் பேசலாம் என்று மறுப்புகளும் புறப்பட்டுக் கொண்டன! இங்கேஸ்ரீஜார்ஜ்ஜோஸப் அண்ணா ஒரு பக்கம் கிளம்பினரு! பழய ரோமாபுரிச் சக்கரவர்த்திகளா லேயே கிறிஸ்துவ மதத்தை ஒடுக்க முடியவில்லையே ; இந்த முழங்கால் வேஷ்டி தாத்தாவால் முடியுமா, இந் தியாவிலுள்ள 60-லக்ஷம் கிறிஸ்தவ ஜனங்களுக்குக் காந்தி தாத்தா பதில் சொல்லி யாகணுமே என்று பெரிய போடு போட்டாரு ! ஒரு சின்ன பேச்சு, அதன் உண்மையான கருத்து ஒன்றிருக்க, வேறொரு பேதப்பட்ட கருத்திலே போய் எவ்வளவு பிரமாத மாய்ப் போச்சுது பார்த்தீர்களா ! கல் கத்தா "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகை தப்பு அர்த்தம் கொண்டவர்களுக்குச் சரியான பதில் சொல்லி யிருக்கிறது. "ஜீவகாருண்யமான வேலையைச் செய்யும் வேஷத்தில் மதம் மாறு தலைச்செய்வது விரும்பத்தக்கதில்லை" யென்று தாதா சொல்லிருப்பதைப் பொது ஜனங்கள் ஆதரிப்பார்களென் றும், மத மாறுதல்கள் அவரவர்களு டைய மனச்சாக்ஷியை ஒட்டி ஏற் படவேண்டுமே யன்றி வெளித்தூண் டுதல்களால் ஏற்படக்கூடாதென்றும் ஆகவே, இந்த விஷயத்தைப் பற்றி விவாதிப்பதில் பிரயோஜனமில்லை யென்றும் அந்தப் பத்திரிகை எழுதி யிருப்பதை விகடன் பாராட்டுகிறேன்! இத்துடன் இந்தக் கருத்து பேதமாய் அர்த்தம் செய்து கொண்ட சங்கதி ஒழிந்ததோ வென்றால் இல்லவே யில்லை! அது பார்லிமெண்டு வரைக் கும் ஏறிப் போய், இந்தியாவில் பாதி ரிகள் தங்களின் பிரசார வேலையைச் செய்ய எப்போதும் சுதந்திர மிருக்க வேண்டுமென்று கேட்கப்பட்டுவிட, அதற்கு மிஸ்டர் பென் இது முக்கிய விஷய மென்றும் அவசியம் கவனிக் கப் படுமென்றும் பதில் சொல்லும் படியும் ஆய்விட்டது! காந்தி தாத் தாவும் தமது பேச்சுகளை அதிக ஜாக் கிரதையில் வைத்துக்கொள்ள வேணு

ஊராரிடத்திலெல்லாம் பசுபோல் நடக்கிறது. தன் வீட்டிலோ புலி போல் பாய்கிறது, சீறுகிறது. வெளிக்கோ வெகு நல்ல பெயர். வீட்டிலோ எமஸ்வரூபமே. இத்தகையோர் ஆண் பெண் இரு இனங்களிலும் உண்டு.

மெனக் கண்டுகொண்டிருப்பா ரென்று விகடன் நினைக்கிறேன்!

ஃ

இது இப்படியாக, இன்னொரு சிக்கலான சங்கதி! 'வெண்ணெய் திரண்டு வருகையில் தாழி உடைந்ததுபோல' இப்பொழுது நம்ம பக்கத்து வீட்டு அண்ணன்மார்களான முஸ்லிம்கள் காந்தி தாத்தாவோடு ஸமரஸத்துக்கு வராமல் தங்களுக்குத் தனித் தொகுதி வேண்டுமென்று சொல்லி வேறுபட்டு நிற்கிறார்கள்! மௌலானா ஷவ்கத்தலி அண்ணா—ஆயிரம்காந்தி வந்தாலும் வரட்டும் ஒரு கைபார்க்கிறேன்; தனித் தொகுதியே தேவை—என்று எதிர்கட்சி பேசுகிறாரு! இதற்கிடையிலே லக்ஷ் மணபுரியில் காந்தி தாத்தாவின் சார்பாய் வேறொரு கூட்டத்தாரான தேசீய முஸ்லிம் அண்ணன்மார்கள் ஒரு பெரும் மகாசபை கூடி, தனித் தொகுதி தேசீய உணர்ச்சியைப் போக்கி அன்னியரின் ஆதிக்கமிருந்து கொண்டிருக்கும்படி செய்யுமென்றும், பொதுத் தொகுதியையே முஸ்லிம்கள் அஸ்திவாரமாகக் கொள்ள வேண்டுமென்றும், அதுவே தேச க்ஷேமத்தை வளர்க்குமென்றும் பேசி தாத்தாவோடு ஒத்துழைக்கப் பிரயத்தனம் செய்கிறார்கள்! இப்படியாக முஸ்லிம் அண்ணன்மாருக்குள்ளே இரண்டு கக்ஷி! இரண்டு பிளவு!! காந்தி தாத்தாவோ என் பக்கத்துவீட்டு அண்ணன்மார்களான முஸ்லிம்கள் ஒரு விதமான ஸமரஸத்துக்கு வராவிட்டால் தான் லண்டனுக்குப் போய்ப் பேசுவதில் பயனில்லையென்றும், லண்டனுக்குப் போகப் போவதில்லையென்றும் சொல்லிக் கொண்டிருக்கிறாரு! இது எப்படி முடியுமோ! எவ்வாறு இந்தக்கிழிந்து கிடப்பதைத் தைத்துச் சரியாக்குவதோ! பூஜை வேளையிலே கரடி புகுந்தாற்போலான இந்தப் பிரிவினையின் விபரீதம் எவ்வாறாகித் தீருமோ! ஏதாவது ஒரு வழி எவ்விதமாகவாவது பிறக்காதாவென்று விகடன் விழித்த கண்களுடனே எதிர்பார்த்து நிற்கிறேன்! அப்பால் இந்தியா—மூந்தியா—பிந்தியா—மற்ற தேசங்களோடு சரிசமமான பந்தியா என்கிற எல்லா சங்கதியும் தானே தெரிந்து விடும்! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

நமது குழந்தைகளானதால் மத்யான நேரத்தில் பழய சாதத்தைப் போட்டாலும் அதைக்குற்றமாய்ப்பேசுவோர் எவரும் இல்லை. அந்தக் குழந்தைகளும் அதில் ஒரு தாழ்வு கற்பிப்பதில்லை. போட்டது எதையாயினும் சந்தோஷமாகப் புசித்து நம்முடன் குலாவுகின்றன. நமது மனதிலும் களங்கமில்லை. குழந்தைகளின் ஹிருதயமும் நிர்மலமானதே. இந்த ஒற்றுமை மற்ற இடத்துக்கு பொருந்துமா? பேதபட்ட மனத்திற்கு பேதமே

---

நல்லோர்களின் மனம் புண்பட்டு நோகச்செய்வோர் சீக்கிரத்தில் அதன் பலனைக் காண்பதில்லை. ஏனெனில், அதிகமான பொல்லாங்குக்குத் தெய்வம் வெகுகாலத்திற்குப்பிறகே பழிவாங்குகிறது. புண்பட்டவர்கள் மரித்தபிறகே அவர்களுக்குத் துன்பம் செய்தோரைக் கடவுள் தண்டிக்கத் தொடங்குகிறார்.




வேலைக்காரிக்கு ஒரு பிடிசாதம் போட்டாலும், பானை சாதம் போட்டாலும் என்னவோ போட்டார்களென்ற பேரே தவிர, காசு கொடுப்பதிலுள்ள கணக்குபோல் ஏற்படாதாம்! ஃ

அவர்களும் இவர்களும் கடிதங்கள் எழுதுவதை விட்டுவிட்டு சந்தித்தபோது மட்டும் பல்லிளிப்பதேன் என்று ஒருவர் கேட்க, அதற்கு விகடன் இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் பலேபலே கற்றுத் தேறி விட்டார்களென்று பதில் சொன்னானாம்!

ஃ

கோர்ட்டில் சாக்ஷி சொல்லப் போகிறவனோடு கூடினால் நம்மையும் சாக்ஷி சொல்லும்படி சிக்கவைத்து விடுவானாம்! ஃ

அவன் நம்மை ஏமாற்றித் தளுக்கு செய்யும்போது, உன்னைவிட அதிகத் தளுக்கு செய்யத் தெரியுமென்று நாம் நேரில் காட்டிவிட்டால் அவனும் அடங்கி விடுவானாம்!

ஃ

தன்னை மகா சத்தியவந்தனென்றும், அரிச்சந்திரனென்றும் வெளியில் தமுக்கடிக்கிறவன் தான் எந்தப் பொய்க்கும் அஞ்சாத சண்டாளனாய் இருப்பானாம்! ஃ

இரவல் வண்டியிலே ஏறி நம் வீட்டு வாசலில் வந்து இறங்கி மயக்குகிறவனை ஒருபோதும் நம்பிவிடக் கூடாதாம்! ஃ

கண்ணுக்குக் கண் சந்தித்தாலும் இந்தக் கண்கள் தான் கண்டதை அருமையாய் நினைத்து ஆவலாதிகொள்ள, எதிர்புறத்துக் கண்களோ அதைச் சட்டை செய்யாமலே போய் விடுகின்றதாம்! ஃ

என்னதான் ஒரு மனிதனிடம் இனிக்கப் பேசினாலும், அவன் முன்பு செய்த வஞ்சனை மாயங்களை எவருமே மறந்துவிட முடியாதாம்!

ஃ

வெறுப்பதாய் வெளிக்குக் காட்டிக் கொள்ளுகிற இன்பத்தைத்தான் உள்ளுக்குவெகுபிரியமாய்ஆவலோடும் விரும்பி நிற்பார்களாம்! ருசிகண்டு தேறியதை மறக்கவே முடியாதாம்!

ஃ

விருந்தினர்கள் வரும் வேளையில் தனக்குச் செலவுகள் ஏற்படாதிருக்க வேண்டுமானால் வீட்டில் பெண் மக்கள் எவரும் இல்லாதிருக்க வேண்டுமாம்! ஃ

ஒருவனுடையவும், ஒருத்தியினுடையவும் ஆணவம் அடங்குவதற்குப் பெண் குட்டிகளையே போட்டு வந்தால் போதுமாம்! ஃ

மூக்குப்பொடிக்குப் பதிலாக, மிளகாயைப் போட்டுக் காய்ச்சின எண்ணெயை மூக்கில் முக்கி முக்கி இழுத்தால் இன்னும் அதிக காரமாயிருக்குமாம்! ஃ

எப்படியாவது பணக்காரனாகி விட்டால் அப்பன் இன்னானென்று அறியாமற் பிறந்ததுங்கூட மறைந்து விடுமாம்! ஃ

தாசியைப் போலவே பிறரிடம் பணம் பிடுங்குவதிலே கண்ணுள்ளவர்களுக்கு எத்தத் தாசியுறவும் ஏற்படாதாம்! ஃ

இருவரும் விழித்துக் கொண்டிருக்கையில் ஒருவரை யொருவர் குல்லாபோட்டுஏமாற்ற முடியாதாம்!

ஃ

அத்தை மகளுக்குக் கொடுத்த மூத்தத்திற்குத் தோஷமில்லையாம்!




## சின்னகதை, நல்ல கதை.





**சுந்தரத்துக்கும்** பத்மாவுக்கும் கல்யாணமாகி ஒரு வருஷம் ஆயிற்று. பத்மா தன் தாயார் வீட்டிற்குப் போயிருந்தாள். பத்மாவின் தகப்பனார் இராமசுவாமி முதலியார் ஆடி பண்டிகைக்கு வரும்படி மாப்பிள்ளை சுந்தரத்துக்குக் கடிதம் எழுதினார். அப்படியே சுந்தரமும் புறப்பட்டு பத்மாவின் வீட்டிற்கு வந்து வண்டியிலிருந்து இறங்கினான். அப்பொழுது இரவு ஒரு மணி யிருக்கும். அந்த சமயம் வீட்டிற்குள்ளிருந்து வேலைக்காரன் எதிரில் வந்தான். சுந்தரம் அவனைப் பார்த்து "மாமனார் சுகமா?" என்று கேட்டான். அதற்கு அவன் "மாமா மாமி எல்லோரும் சுகம்; உள்ளே போங்கள்" என்று சொன்னான். சுந்தரமும் சந்தோஷத்தோடு வீட்டிற்குள் சென்றான்.

2. வீட்டிற்குள்ளே சுந்தரத்தின் மனைவியான பத்மா தன் தந்தையின் மேல் கால் போட்டுக்கொண்டு தூங்கியபடி இருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் தாயார் கமலாம்பாள் படுத்திருந்தாள். சுந்தரம் தன் பெட்டியை உள்ளே எடுத்து வைத்து விட்டு, தெருக் கதவை மூடப் போனான். கதவில் தாழ்ப்பாளைப் பார்க்க அதைக் காணோம். அங்கிருந்த நாற்காலியைக் கதவின் பக்கம் வைத்து விட்டு, எவரையும் எழுப்பாமல் மாமனாரின் பக்கம் படுத்துக் கொண்டான். உடனே நல்ல தூக்கமும் அவனுக்கு வந்துவிட்டது.

3. விடியற்காலையில் கமலாம்பாள் எழுந்தாள். மாப்பிள்ளை சுந்தரம் தூங்குவதைக் கண்டு, "எப்போது வந்தார்" என்று ஆச்சரியப்பட்டாள். தன் கணவனை மெதுவாக எழுப்பினாள். இராமசாமி முதலியாரும் எழுந்து தன் பக்கத்தில் தூங்கும் மாப்பிள்ளையைப்

---

வீட்டில் இல்லாத நகைகள் அடகுக்குப் போயிருக்கலாம். அல்லது விற்றோ, போக்கடிந்தோ போயிருக்கலாம். இரவல் தருவதென்பது அதிகமில்லை, அது எப்போதும் நேருவதுமில்லை; என்ன விசேஷத்திற்காக இரவல் பெற்றார்களென்ற கேள்வியும் அத்துடன் பிறக்கலாம்.

பார்த்து சந்தோஷமாய், "எப்போது வந்தார்" என்று தன் மனைவியை வினவினர். அதற்குக் கமலாம்பாள், "எப்போது வந்தாரோ எனக்குத் தெரியாது" என்றாள். "அப்படியானால், மாப்பிள்ளை உள்ளே வரக் கதவைத் திறந்தது யார்?" என்று கேட்டார்.

4. இந்த சமயத்தில் பத்மா விழித்துக் கொண்டு எழுந்தாள். பக்கத்தில் தன் கணவர் தூங்குவதைக் கண்டு, "எப்போது வந்தார்" என்று தன் தந்தையைக் கேட்டாள். இராமசாமி முதலியாருக்கு ஆச்சரியமாய் விட்டது. தானும் கதவைத் திறக்கவில்லை; கமலாம்பாள், பத்மா இவர்களும் கதவைத் திறக்கவில்லை; பிறகு கதவைத் திறந்தது யார் என்று யோசித்தார். பிறகு எழுந்துபோய்க் கதவைப் பார்க்க, அதில் தாழ்ப்பாளையே காணவில்லை.

5. கடைசியாக, சுந்தரமும் எழுந்தான். "உமக்கு யார் கதவைத் திறந்து விட்டது?" என்று இராமசாமி முதலியார் கேட்டார். அதற்கு சுந்தரம், "நான் வண்டியை விட்டு இறங்கியதும் ஒருவன் வந்து எல்லோரும் சுகம் என்று சொல்ல, நானும் கதவு திறந்திருந்ததால் உள்ளே வந்தேன்; பிறகு கதவை மூடப்போகத் தாழ்ப்பாளைக் காணோம்" என்று சொன்னான்.

6. "உம்மிடம் வந்துசொன்னவன் யார்?" என்று இராமசாமி முதலியார் கேட்டார், "அவனை உங்கள் வேலைக்காரன் என்று நினைத்துக் கொண்டேன்" என்று சுந்தரம் சொன்னான். இங்கு வேலைக்காரன் எவனும் கிடையாதே என்று இராமசாமி முதலியார் அதிசயப்பட்டார்.

7. இதற்குள் பொழுதும் நன்றாய் விடித்துவிட்டது. ஒரு போலீஸ்காரர் அங்கு வந்து, "ஒரு திருடன் அகப்பட்டுக்கொண்டான்; அவனை நேற்றிரவு வழியில் போகும்போது சந்தேகப்பட்டுப் பிடித்தோம்; அவனிடம் ஒரு தாழ்ப்பாளும், அதைக் கழற்றக் கூடிய இரண்டு ஆயுதங்களும் இருந்தன; அவன் உங்கள் வீட்டில் திருட வந்தானாம்; அந்த சமயம் யாரோ வண்டியிலிருந்து இறங்கவும் தப்பித்து ஓடிவிட்டானாம்" என்று சொன்னார்.

8. எல்லோருக்கும் இப்போது கதவைத் திறந்தது யார் என்று தெரிந்தது. மூடியிருந்த கதவின் உள் தாழ்ப்பாளைத் திருடன் தன் ஆயுதத்தால் கழற்றி எடுத்துவிட்டுக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்திருக்கிறான்; அதே சமயம் சுந்தரமும்

---

புத்திசாலிகளும், மூடர்களும் பக்கத்தில் இருந்தால் நாம் நமது பொருளை அதிக பத்திரமாய்ப் பாதுகாக்க நேர்கிறது. புத்திசாலிகள் கௌரவமாய்த் திருடிக்கொண்டுபோய்த் தங்கள் சொத்தாக்கிக் கொள்ளலாம். மூடர்களோ அவற்றின் அருமை தெரியாமல் அதனைச் சின்னாபின்னப்படுத்திவிடலாம்.

வந்துவிட, திருடனும் அதைக் கண்டு பயந்து வெளியில் வந்துவிடுகிறான்; அவனை வீட்டு வேலைக்காரன் என்று சுந்தரம் நினைத்து, "மாமனார் சுகமா?" என்று கேட்கிறார். அவனும் அதற்குத் தகுந்தபடி "மாமா மாமி எல்லோரும் சுகம் என்று சொல்ல, சுந்தரமும் உள்ளே போக, அவனும் ஓடிவிடுகிறான்; பிறகு நடுவழியில் போலீஸார் அவனை சந்தேகித்துப் பிடித்துவிட்டார்கள்; நல்ல திருடன், நல்ல வீட்டு வேலைக்காரன் என்று சொல்லி இராமசாமி முதலியார் சிரித்தார்.

9. "நான் அந்த சமயம் வராமற்போனால், வீட்டில் திருடன் நகைகளையெல்லாம் திருடியிருப்பான்" என்று சுந்தரம் சொன்னான். அதற்கு இராமசாமி முதலியார், "ஆமாம், நீங்கள் கெட்டிக்கார மாப்பிள்ளை தான்; ஆனால் திருடனைப் பிடிக்காமல் ஏமாறிப்போய் விட்டுவிட்டீரே" என்று கேலி செய்தார்.

10. திருடனைப் போலீஸார் சிறைக்கு அனுப்பினார்கள். மறுநாள் ஆடி பண்டிகை; மாப்பிள்ளை சுந்தரத்துக்கு வடை பாயசத்தோடு நல்ல விருந்து நடத்தி எல்லோரும் சந்தோஷமாக இருந்தார்கள். இது சின்ன கதையானாலும் நல்ல கதையல்லவா?

## உன்னைப்பற்றியும் நாளை பேசுவான்

சிலர் தங்கள் குடும்பத்தினரைப்பற்றிப் பிறரிடம் வெகு கேவலமாக நீசத்தனமாய் அவர்கள் அப்படி, இவர்கள் இப்படியென்று வாய் ஓயாமல் மிக்க அசங்கதமாய்ப் பேசுவார்கள். அதைக்கேட்பதற்கே சகிக்கிறதில்லை. மற்றவர்களைப்பற்றி நல்லது இருந்தால் மட்டும் சொல்லு வீணாகப் பிறரைப்பற்றிய இழிவு சொல் நிகழ்த்த வேண்டாமெனில் இவர்கட்குக் கோபம் வந்துவிடுகிறது. இத்தகையோர் நாளைக்கு நம்மைக் குறித்து பிறரிடம் இப்படியே வாய்மெல்லலாம். அவர்களுக்கு எந்த சங்கதியும் நம்மைப் பற்றிக் கிடைக்காதிருக்க ஜாக்கிரதையாயிருக்கக் கடவோம் கொலை பாதகன் ஓர் உயிருக்கு ஒரு முறைதான் துன்பம் செய்கிறான். கோட் சொல்லியோ ஆனந்தம் உயிர்களை அநேககாலம் வருத்துகிறான்.

பகவானே! பொழுது புலர்ந்தது. இன்றையப்பொழுது நல்ல பொழுதாய்ப் போகக் கிருபை செய்வீராக. நேற்றைய சோதனையை இன்றும் காட்டவேண்டாம்.



# நல்லவனுவ தெப்படி?

நல்லவனுவ தெப்படி யென்று ஒருவன் கேட்டதற்கு, பெயர் பெற்ற ஆங்கில விற்பன்ன ரொருவர் அடியில் வருமாறு கூறினர் :—எந்த மனுஷ்யன் எந்த விஷயத்தில் விருப்பங் கொள்ளுகிருனே அதற் கேற்றபடி பேசுவதும் நடிப்பதும் நல்லவ னென்ற பெயரைக் கொண்டுவந்து கொடுப்பதற்குத் தக்க வழியாம் என்ருர். இதை இங்கிலீஷிலுள்ளபடியே மொழிபெயர்த்தோம். இதன் பொருளைச் சில உதாரணங்களால் விளக்கிக் கூறுவோம். ஒருவன் நாடகப் பிரியனு யிருந் தால் அவனிடம் நல்லவனென்ற பெயரைப் பெறவேண்டி நாம் நாடகத்தைப் புகழ்ந்து பேசவேண்டும். உண்மையில் நமக்கு நாடகத்தின் மீது வெறுப்பு உண்டாயினும், அதையவனிடம் காட்டாமல் விருப்ப மிருப்பதுபோல் பாவனை செய்யவேண்டும். மற்ருெருவன் ஆலயந் தொழுவதில் ஆசை கொண்டவனு யின், நாம் அவனுடைய விஸ்வாஸத்தை யடைவதற்காகக் கோயிலுக்குப் போகத் தயாராயிருக்கவேண்டும். சிலர் பகவத்பக்தர்களென்ற பெயரைச் சூட் டிக்கொண்டு மதுமாம்ஸப் பிரியராய்த்திரிவர். அவர்களின் பிரீதியை நாம் அடையவேண்டுமாகில், அன்னேரின் அஸங்கித காரியங்களை யறியாததாகவே நடித்து மகா பக்திமான்களென அவர்களைப் புகழவேண்டும். ஒரு பிரபு தாவி லோலனுய் அலைந்தால் அவருடைய கிருபையை விரும்பும் நாம் அதை அறியா தவர்களாகவே நடிக்கவேண்டும். எவருக்கு எதில் இஷ்டமோ அதை அவர்க ளின் முன்னிலையில் வெறுத்துக் கூறுவது அப்பிரியத்துக்கிடம்.

ஃ

இதனுல், இச்சகம் பேசுவோன் என்ற கெட்டபெயரை நாம் அடைவோ மென்று பயப்படலாகாது. இச்சகம் பேசல் கெடுதலாயினும், இச்சகத்தில் நல்லவனென்ற பெயரைப் பெற விரும்புவோன் இச்சகம் பேசாமலிருக்க முடி யாது. ஆனுல், இச்சகம் பேசுவதால் நம்மையும் பிறரையும் விபத்துக்குள்ளா காதபடி மாத்திரம் நாம் நடித்துக்கொள்வ தவசியம். யாருடைய ஸகவாஸத்தால் ஜீவனுக்குத் தீங்கு விளையுமோ அவருடைய ஸகவாஸத்தை மட்டும் ஒழித்து மற்றவருடைய நட்பைக் கொள்வதும், அவரவர்கட் கேற்ப ஹிதகரமாய் நடப் பதும் குற்றமாகாது. அதனுல் நற்பெயருண்டாகும். ஆத்திரத்தை உண்டாக் கும் வார்த்தைகளையும், அகங்காரமான மொழிகளையும், நிந்தாஸ்பதமான பதங்களையும் விலக்கி, கௌரவமான சொற்களையே என்றும் வழங்கி வருவோ மானுல், நமதுமனம் கெடாமல் பரிசுத்த மடைவதுடன் எல்லோருடைய பிரீ திக்கும் பாத்திரர்களாவோம். ஒரு நிமிஷத்தில் கெட்டபெயரை சம்பாதித்து விடலாம். நற்பெய ரெடுப்பதற்கே அதிக நாட்கள் செல்லும்.

---

"உன்னுல் என்ன ஆகும்?" என்று மனைவி தன் கணவனை எதிர்க்கிருள். அவனைக் கடித்தும், உடைகளைக் கிழித்தும், தான் தூக்குபோட்டுக்கொள்ளப் போவதுபோல் கயிற்றுடன் அறைக்குட் சென்றும் கதவைத் தாளிடுகிருள். "பேய்கொண்டாலும் கொள்ளலாம் பெண்கொள்ளலாகாதே" என்று பாடி து இவ்வித அக்கிரமிகளைக் குறித்தேபோலும்! விவாக சுகமா இது?

# " அமிர்த குணபோதினி "

## பிரஜோத்பத்தி வருஷத்திய வைகாசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங்கி | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி-அ | 14 | 1 | வி | துவா 28-13, ரே 58-0, ரிஷபரவி 29-3, விஷ்ணுபதி. |
| அ | 15 (5-3) | 2 | வெ | திர 32-46, அசு 60-0, பிரதோஷம், சிவராத்திரி. |
| சி | 16 | 3 | ச | சசி 36-1, அசு 3-39. |
| பி-சி | 17 | 4 | ஞா | ● 37-51 பர 7-39, கிருத்திகை, அமாதர்ப்பணம். |
| ம-அ | 18 | 5 | தி | பிர 38-27, கிரு 10-27, ஜ்யேஷ்டசுத்தம். |
| அ-சி | 19 | 6 | செ | துவி 37-47, ரோ 12-5, சந்திர தரிசனம். |
| சி | 20 | 7 | பு | திரி 36-2, மிரு 12-34, கரிநாள். |
| ம-அ | 21 | 8 | வி | சது 33-21, ஆரு 12-1. |
| சி-உ | 22 | 9 | வெ | பஞ் 29-53, புந 10-40, மிதுனயனம் 2-29. |
| சி-ம | 23 | 10 | ச | ஷஷ் 25-42, பூச 8-36, ஷஷ்டி விரதம், திருமாகளம் [யாக உத்ஸவம். |
| சி-ம | 24 | 11 | ஞா | ஸப் 20-59, ஆயி 5-58, திதித்வயம். |
| ம-சி | 25 | 12 | தி | அஷ் 15-45, மக 2-51, உப 56-24, தர்க்காஸ்வாபோத்ஸவம், நவ திருப்பதி கருடன். |
| அ-சி | 16 | 13 | செ | நவ 10-8, உத் 55-22, திருக்கண்ணபுரம் கருடன். |
| ம-சி | 27 | 14 | பு | தச 4-14, உப 53-55, ஹஸ் 50-56, சிங்கபெருமாள் கோயில் ரதம். |
| சி-அ | 28 | 15 | வி | துவா 52-2, சித்47-9, ராமலக்ஷ்மண துவாதசி, வைஷ் [ணவ ஏகாதசி. |
| சி | 29 | 16 | வெ | திர 46-7, ஸ்வா 43-9, பிரதோஷம், கரிநாள். |
| சி | 30 | 17 | ச | சசி 40-37, விசா39-39, கஞ்சிவரதர்கருடன், வைகாசி விசாகம், கரிநாள், திருவண்ணமலை தெப்பம். |
| ம | 31 | 18 | ஞா | ○35-48, அநு36-44, வடசாவித்ரீவிரதம், விருஷபபூஜா |
| சி | 1 | 19 | தி | பிர 32-1, கேட் 34-55. |
| அ-சி | 2 | 20 | செ | துவி 29-34, மூல 34-26, சேலம் சுந்தரேசுவரர் ரதம். |
| அ | 3 | 21 | பு | திரி 28-45, பூரா 35-33. |
| சி | 4 | 22 | வி | சது 29-38, உரா 38-23, சங்கஷ்டசதுர்த்தி. |
| ம-சி | 5 | 23 | வெ | பஞ்32-19, ஶ்ரூவ42-55. |
| சி-அ | 6 | 24 | ச | ஷஷ்36-37, அவி48-57. |
| சி | 1931 ஜூன் 7 | 25 | ஞா | ஸப்42-7, சத56-1. |
| சி | 8 | 26 | தி | அஷ் 48-17, பூட் 60-0, திரிலோசன பூஜா. |
| ம-அ | 9 | 27 | செ | நவ 54-28, பூட் 3-38, நவமிதிதி. |
| சி | 10 | 28 | பு | தச 60-0, உட் 11-11, தசமிதிதி. |
| சி-அ | 11 | 29 | வி | தச0-3, ரே 1[illegible]-2, ஜீவவார ஏகாதசி, ஏகாதசிதிதி. |
| அ-சி | 12 | 30 | வெ | ஏகா 4-33, அசு 23-42, ஸர்வைகாதசி, துவாதசிதிதி. |
| சி-அ | 13 | 31 | ச | துவா 7-32, பர 27-50, லக்ஷபத்மவிரதம், பிரதோஷம். |
| சி | 14 | 32 | ஞா | திர 8-53, கிரு 30-20, மிதுனரவி 45-34, கிருத்திகை, சதுர்தசிதிதி, சிவராத்திரி. |

| ரா | புத சுக் | ரவி | குரு |
|---|---|---|---|
| | 15வக்கு ராசி. | | |
| சனி | | | குஜ |
| | | | கே |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை, 1931.